உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 11 | அக்ஷய௵ சித்திரைமீ ௧௳ | 1926௵ ஏப்ரல்மீ 13௳ | பகுதி 10

## கடவுள் வணக்கம்.

அன்பின்வழி யறியாத வென்னைத் தொடர்ந்தென்னை
யறியாத பக்குவத்தே
ஆசைப் பெருக்கைப் பெருக்கிக் கொடுத்து நா
னற்றே னலந்தே னென
என்புலன் மயங்கவே பித்தேற்றி விட்டா
யிரங்கியொரு வழியா யினும்
இன்பவெள மாகவந் துள்ளங் களிக்கவே
யென்னைநீ கலந்த துண்டோ
தன்பருவ மலருக்கு மணமுண்டு வ[illegible]ண்டு
தண்முகை தனக்கு முண்டே
தமியனேற் கிவ்வணந் திருவுள மி[illegible]காத
தன்மையாற் றனி யிருந்து
துன்பமுறி னெங்ஙனே யழியாத நின்னன்பர்
சுகம்வந்து வாய்க்கு முரையாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே. (1)

---

பாடி யாடிநின் றிரங்கிநின் பதமலர் முடிமேல்
சூடி வாழ்ந்தன ரமலநின் னடியர்யான் றெழும்பன்
நாடி யேயிந்த வுலகத்தை மெய்யென நம்பித்
தேடி னேன்வெறுந் தீமையே யென்னினிச் செய்வேன். (2)

---

களவு வஞ்சனை காமமென் றிவையெலாங் காட்டும்
அளவு மாயையிங் காரெனக் கமைத்தன னையா
உளவி லேயெனக் குள்ளவா றுணர்த்தினுன் னடிமை
வளரு மாமதி போன்மதி தளர்வின்றி வாழ்வேன். 3)

---

## அரும்பொருள் விளக்கம்.

1. அன்பின் தன்மையை அறியும் பக்குவநிலையை யடையாத பருவத்திலேயே அந்த ஆசைப்பெருக்கை யுண்டுபண்ணி, அதன்மூலமாக அறிவை மயக்கி அலற வைத்த இறைவனை நோக்கி "இவ்வாறு பித்தேற்றிய நீ அதற்குரிய ஆனந்தத்தை யளித்து நான் மகிழும் வண்ணம் என்னைச் சேரத் திருவுளப்பாங்கு கொள்ளாமையால் அதுபற்றி வருந்தும் அடியேன், உன்னைக் கலந்தனுபவிக்கும் அறிவாள ரடையும் இன்பத்தை எக்காலத் தடைவேன்" என்று ஆசிரியர் இப்பாடலில் கூறுகின்றார்.

மலருண்டானபோதே அதில் மண மிருந்தும் அம்மலர் மலர்ந்த பிறகே மணம் வெளிப்படும்; அது வெளியான அவசரத்தே வண்டுவந்து அந்த மலரிற் பொருந்தும்; அதுபோல ஆன்மா வுள்ளவன்றே அவ்வான்மாவிடத்துத் திரோதான சத்தி பதிந்திருந்தும், அந்த ஆன்மாவிற்கு மலபரிபாகம் வந்தபின்பே அருட்சத்தி வெளிப்படும்; அது வெளிப்பட்ட அவசரத்தே இறைவன் பொருந்துவன்; ஆகவே, இறைவனை வண்டாகவும், அறிஞரைப் பருவகால மலராகவும் கொண்டனர்.

இங்ஙனம் அறியாத பருவத்திலேயே அன்புண்டானதற்குக் காரணம் யாதோவெனின் பூர்வஜென்மாந்தர புண்ணியத்தின் தொடர்ச்சியேயாம். அதுவும் இறைவன் அநுக்கிரகமே யாதலின், 'அன்பின் வழியறியாத என்னைத் தொடர்ந்தென்னை யறியாத பக்குவத்தே ஆசைப்பெருக்கைப் பெருக்கிக்கொடுத்து நானற்றே னலந்தேன்' என வைத்தனை என்றார்.

"அறிவி லாதவெ னைப்புகுந் தாண்டுகொண் டறிவதை யருளிமேல்
நெறியெ லாம்புல மாக்கிய எந்தையைப் பந்தனை யறுப்பானைப்
பிறிவி லாதவின் னருள்கள்பெற் றிருந்துமா றாடுதி பிணநெஞ்சே
கிறியெ லாமிகக் கீழ்ப்படுத் தாய்கெடுத் தாயென்னைக் கெடுமாறே"

என்று திருவாசகங் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

'கலந்தனுண்டோ' என்றதனால் இதுகாறுங் கலவாதிருந்து இனி நூதனமாகக் கலக்கும்படி கேட்டுக்கொண்டதன்று, அனாதியே கலந்துள்ள இறைவன் வெளிப்பட விரும்பியதாம்.

அற்றேன் = கெட்டேன்.
அலந்தேன் = வாடினேன்.
புலன் = அறிவு.
ஒருவழி = ஒருதரம்.
முகை = அரும்பு.

2. இப்பாடலில் அடியார்கள் ஆனந்தமேலீட்டால் இறைவன் சந்நிதானத்தில் ஆடியும், பாடியும், அகங் கசிந்துருகித் திருவடியிற் பணிவார்களாதலின் 'பாடி யாடி நின்றிரங்கி நின் பதமலர் முடிமேல் சூடி வாழ்ந்தனர்' என்றார்.

பாட வேண்டுநான் போற்றி நின்னையே பாடி நைந்துநைந் துருகி நெக்கு [நெக்
காட வேண்டுநான் போற்றி யம்பலத் தாடுநின்கழற் போது நாயினேன்
கூட வேண்டுநான் போற்றி யிப்புழுக் கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெ [லாம்
வீட வேண்டுநான் போற்றி வீடுதந் தருளு போற்றிநின் மெய்யர் மெய் [யனே''

என்று திருவாசகத்தில் வருவது காண்க. இத்தகைய காரியங்களில் தானொன்றுஞ் செய்யாது பிரபஞ்சமுகமாகவிருந்து கெட்டேனென்பார் 'உலகத்தை மெய்யென நம்பித் தேடினேன் வெறுந் தீமையே' என்றார்.

தொழும்பன் = தொண்டன்.

3. பொல்லாங்கு செய்தலும், பொய் சொல்லுதலும், கண்டதை மறந்து மயங்கி வருதலும், காமவாசையால் மூர்ச்சித்தலும், ஆசையுண் டாயதனை யில்லையாக ஒளித்தலும், உயிருக் கிறுதி வருமென்று அச்சப் பட்டுத் திரிதலும், மாயையின் குணங்களாதலால் 'களவு வஞ்சனை...... மாயை' என்று இப்பாடலிற் செப்புகின்றார்.

ஆன்மாக்கட்கு மாயை அநாதியெனவும், இடையில் வந்த தன்றெனவும் குறிப்பிப்பார் 'மாயை யிங்காரெனக் கமைத்தனர்' என்றும், மாயையின் மயக்கத்தால் நாளுக்குநாள் அறிவு தேய்பிறைபோ லாகின்றதென்பார் 'உளவிலே யெனக்.........வாழ்வேன்' என்றும் கூறினர்.

களவு = திருடு.
காமம் = விருப்பம்.
உளவு = இரகசியம்.
வளருமாமதி = வளர்பிறை.

---


# ஆனந்தபோதினி

அக்ஷய ஹ சித்திரை மீ கவ


## மனைவியின் முக்கிய கடமைகள்.

மனிதர்க்கு, இம்மை, மறுமை என்னும் இரண்டிடங்களிலும் நன்மை பயப்பதாகிய இல்லறத்தை நடத்தும் ஒருவனுடைய மனைவியினிடத்தே, அவ்வறத்திற் கின்றியமையாதனவாய், அமைந்

திருக்கத்தக்க குணங்கள் பலவுள. அக்குணங்கள் ஓர் இல்லக் கிழத்தியின்பால் பொருந்தியிருக்கு மெனின், அவளை மனைவியாக அடைந்தவனுக்கு எல்லாச் சிறப்புக்களுமுண்டாகும். அவளிடத்தே அக்குணங்கள் இல்லையெனின் எவ்விதச் சிறப்புமின்றாம். அவற்றை,

"இல்லதெ னில்லவள் மாண்பானா லுள்ளதென்
இல்லவள் மாணாக் கடை"

என்னுந் தமிழ்ப் பொதுமறைச் செய்யுள் இனிது விளக்கும். இத்தகைய மனையறம்புரியும் மங்கையர்க்குப் பொருந்துவனவாகிய குணஞ் செயல்கள் இன்னவை யென்பதையும், பொருந்தாதன இன்னவை யென்பதையும் பெரியோரால் இயற்றப்பெற்ற பல நீதிநூல்களாலும், அறிஞரால் வெளியிடப்படும் பத்திரிகைகளாலும் நன்கு தெரிந்துகொள்ளலாம். அவை பலர்க்கும் தெரிந்தவைகளே. அவற்றுள் மங்கையர் தள்ளத்தக்கன தள்ளிக் கொள்ளத்தக்கன பல விருப்பினும் அவற்றுள்ளும் முக்கிய கடமைகள் சிலவுண்டு. அவற்றைப் பெண்மணிகள், தம் கண்ணைப் பேணுவதுபோலப் பேணிக் கொள்ளவேண்டும். அவைதாம், மனைவி கணவனுக்கு இனிய உணவு சமைப்பதில் கைதேர்ந்தவளா யிருத்தலும், அவன்மீ தன்புடையவளாயிருத்தலும், கணவன் சொற் கடவாதிருத்தலும், இரவில் கணவனுக்குப் பணிவிடை இயற்றிப் பின்தூங்கி முன்னெழுதலுமாம். இவை, நாயகனுக்கு மிக்க மகிழ்ச்சியையும் புகழ்ச்சியையும் உண்டாக்கக் கூடியனவாயிருத்தலின், அறிஞர், அரிவையர்க்குரிய உயரிய குணங்களில் இவற்றை அரியனவாகப் பாராட்டுகின்றனர். திருவள்ளுவனாரும், தம் மனைக்கிழத்தியார், உயிர் நீங்கிய தருணத்தில், அவர் பிரிவாற்றாமையைக்குறித்து உளமுருகி யுரைத்த செய்யுளில்,

"அடிசிற் கினியாளே யன்புடை யாளே
படிசொற் கடவாத பாவாய்—அடிவருடிப்
பின்றூங்கி முன்னெழூஉம் பேதையே போதியோ
என்றூங்கு மென்க ணிரா"

என்று இக்குணங்களையே பாராட்டுதல் காண்க. இதனால் மனைக்கிழத்திகளிடத்தில் மற்ற குணங்கள் ஒருசமயம் குறைவுற்றிருப்பினும் இக்குணங்கள் மட்டும் குறைவுறலாகாதென்பது விளங்கும். இவற்றுள் மற்றைய இல்லறவொழுக்கங்களனைத்தும் அடங்கியிருத்தலின் ஒரு பெண்மணியினிடத்து இவை சிறந்து நிற்பின் மற்ற நற்

குணங்களெல்லாம் தாமே அமையுமாதலின் பெரியோர் இவற்றையே தலைசிறந்தனவாகச் சாற்றியிருக்கின்றனர். இச் சீரிய ஒழுக்கங்களைக்கொண்டே முற்காலத்திருந்த கற்பரசிகள், பொன்றுப் புகழை மண்டலத்தில் என்றென்றும் நிலவுமாறு நிலைநிறுத்திச் சென்றிருக்கின்றார்கள். இக்காலத்தவருள்ளும் அநேகம் அறிவிற்சிறந்த அரிவையர் இந் நற்குணங்களைப் பொன்னேபோலப் போற்றிப் புகழடைந்து வருகின்றனர். அவர்களால் நடத்தப்பெறும் இல்வாழ்க்கைகளும் நல்வாழ்க்கைகளாய் நடைபெற்று வருகின்றன. அவர்களும் இன்புடையாராய்ச் சிறந்திலகுகின்றனர்.

எனினும், சிலர் மட்டும் விகற்பபுத்தியினாலோ, பொருந்தாத புறநாட்டு நாகரிகமயக்கத்தாலோ அந் நல்லொழுக்கங்களைக் கைவிட்டுத் துராசாரங்களை மேற்கொண்டொழுகுகின்றனர். தங்கள் கணவர்கள் அரும்பாடுபட்டுப் பொருள்தேடிவந்து தங்களிடம் கொடுப்பினும், தாங்கள் அவர்க்கினிமையான உணவுகளைச் சமைத்து உரிய காலத்தில் உதவுவதில்லை. ஆடவர்கள், காலைப்பத்துமணிக்கு அகப்பட்ட உணவை உட்கொண்டு உத்தியோகத்திற்கோ வேறு தொழிலுக்கோ போய்விட்டபிறகு இப்பெண்டிர்கள் பதறுமலிருந்து ஆகாரம் சாப்பிட்டுவிட்டுக் குடும்பகாரியங்களைச் சிறிதும் கவனியாமல் பகல் முழுதும் படுத்துறங்குகிறார்கள். சாயுங்காலம் ஐந்துமணியானாலும் எழுந்திருப்பதில்லை. அவர்களுக்கு மாமிமார்களிருந்தால் "என்னடி அம்மா! இன்னும் அடுப்புவேலையைப் பார்க்காமல் தூங்குகிறாயே!" என்று அவர்களை எழுப்பிவிடுகிறார்கள். அதன்மேல் அவர்கள் கொட்டாவி விட்டுக்கொண்டு சமையல் வேலையில் பிரவேசிக்கிறார்கள்; அவ்வாறு மாமிமார்கள் இல்லாவிடிலோ, அவர்கள் ஆறுமணிக்கோ ஏழுமணிக்கோதான் எழுந்து அடுப்பில் நெருப்பை மூட்டுகிறார்கள். அங்ஙனம் மூட்டி உலையில் அரிசியைப்போட்டவுடன் அவர்களுக்கு விளையாட்டு நினைப்பு வந்துவிடுகிறது. அதனால் அவர்கள் உடனே அடுப்பைக் கவனியாமல் சில சிறு பெண்குழந்தைகளை அழைத்துக்கொண்டுபோய் ஓரிடத்தில் உட்கார்ந்து பொம்மைக் கலியாணம் செய்யவோ, தாயம் ஆடவோ, வீண்கதை பேசவோ, கலியாணப்பாட்டுப் பாடவோ ஆரம்பித்து விடுகிறார்கள். இந்த விளையாட்டிலேயே நெடுநேரம் வரை புத்தியைச் செலுத்திக் கொண்டிருந்துவிட்டு, "ஐயையோ! உலையில் அரிசி போட்டு வந்தேனே! அது எப்படியாச்சோ!" என்று எழுந்தோடி உலையைப்

பார்க்கிறார்கள். அரிசியெல்லாம் வெந்து குழைந்து கூழாகிப்போ யிருக்கிறது. அவர்கள் அதிலுள்ள மேல்கஞ்சிநீரை வடித்துவிட்டு' கூழான சோற்றை இறக்கிக் கீழே வைத்துக் குழம்பென்ற பேருக்கு ஒன்றை அடுப்பேற்றி இறக்கி விட்டுப் படுக்கையில்போய்ப் படுத்து மீண்டும் உறங்கி விடுகிறார்கள்.

இரவு எட்டுமணிக்குமேல் வேலைக்குச்சென்ற கணவர்கள் பசி யிளைப்போடு திரும்பி வீட்டிற்கு வருகிறார்கள். அவர்கள் எந்த வகை யிலும் பெண்களுக்குச் சிரமம் உண்டாக்கக்கூடாது என்னும் நவீன நாகரீகம் கற்றவர்களாதலின் அவர்களை எழுப்புதற்குப் பயந்து, வெளியிற்போவதும் வீட்டிற்குள் வருவதுமாய்க் கொஞ்சநேரம் உலவித் திரிந்துவிட்டுத் தாங்களும் ஒருபக்கத்தில் படுத்துப் பசியி னால் தூக்கம் பிடிக்காமல் புரண்டுகொண்டு கிடக்கிறார்கள். பின் பத்துமணிக்கோ, பதினொருமணிக்கோ அந்தப் பெண்மணிகள் விழித்துப் புரளுகிறார்கள். அந்தச் சமயம்பார்த்து நாகரீக நாயகர் கள், 'என்ன! எழுந்திருக்க வில்லையா?' என்று தங்கள் குரலை மெல்லிதாகக் காட்டுகிறார்கள். அந்த நாகரீக நாரீமணிகள் கைகால் களை உதறிக்கொண்டு எழுந்து கூழாகச் செய்துவைத்திருந்த சோற்றை அந்நாயகருக்கு நேயமாகப் படைக்கிறார்கள். அவர்கள் அதைத் தொட்டுப் பார்த்துவிட்டு 'என்ன! சாதத்தை அல்வா வாக்கி வைத்திருக்கிறீர்கள்?' என்று அவர்களிடம் கேட்கிறார்கள். அவர்கள், 'பொம்மைக் கலியாணம் செய்தோம்; அதற்காக அல் வாச் செய்தோம்' என்கிறார்கள். அதைக்கேட்டுப் பூவையர் சொல் வழி நிற்கும் அப்பூமான்கள், 'ஓகோ! அப்படியா!' என்று சொல் லிக்கொண்டு குதூகலத்துடன் குழைந்த சோற்றை விழுங்கிவிட்டு எழுந்திருக்கிறார்கள். பின் அந்தப் பெண்மணிகள் அதைச் சாப்பிட உட்கார்ந்து, அது தங்களால் சமைக்கப்பட்டும், புருஷரால் விழுங் கப்பட்டு மிருப்பினும், தங்களுக்குப் பிடிக்கவில்லையென்று முகத் தைச் சுழிக்கிறார்கள். புருஷர்கள், அவர்களுக்கு அதிருப்தி யுண் டாகாவண்ணம் மிட்டாய்க் கடைக்குச்சென்று பாதம் அல்வா வாங்கிவந்து கொடுக்கிறார்கள். அவர்கள் ஆனந்தத்துடன் அதை விழுங்கிவிட்டுப் புருஷர்கள் படுப்பதற்கு முந்தியே படுத்துறங்கி விடுகிறார்கள். அவர்களுக்குப்பின் கணவர்கள் தூங்குகிறார்கள். மறு நாள் விடிந்தவுடன் அந்த ஆடவர்கள், தங்கள் தொழிலுக்குப்போக வேண்டுமென்று முன்னரே எழுந்துவிடுகிறார்கள். அந்த மாதரசி

களோ காலை ஒன்பதுமணி வரையில் எழுந்திருப்பதில்லை. அதன் மேல் எழுந்தாலும் ஆகாரவேலை ஆவதேயில்லை. அதனால் அந்நாயகர்கள் சிலசமயம் சொற்ப ஆகார முண்டும், சிலசமயம் ஒன்று முண்ணாமல் வயிற்றை இறுக்கிக் கட்டிக்கொண்டும் வேலைக்குப் போய்விடுகிறார்கள். அப்படிப்போனாலும், இவைகளினாலெல்லாம் அவர்களுக்குத் தங்கள் காதலிகளின்மீது சிறிதும் அதிருப்தி யுண்டாவதில்லை. இந்தப் பழக்கங்கள் அவர்களுடைய இல்வாழ்க்கையில் தினந்தோறும் நடந்து வருவதால் அந்த ஆடவர்களும் சோம்பேறிகளாய், கும்பகர்ணனை நிகர்த்து நாளடைவில் தூக்கத்தில் கீர்த்திபெற்றுவிடுகிறார்கள். பின்னர் இத்தகையினர் குடும்பங்களில் ஆண்மக்களும் பெண்மக்களும் எந்தநேரத்திலும் தூங்குவதிலேயே தங்கள் வாழ்நாட்களைக் கழிக்க ஆரம்பித்துவிடுகிறார்கள். ஆடவர்கள் தொழில்களிலும் கவனம் செலுத்தாமல் அந்தப் பெண்களைப் போலவே காலை ஒன்பதுமணிவரையிலும் தூங்கிக் கிடக்கிறார்கள். அந்தப் பெண்களுக்கு மாமிமார்களும், ஆடவர்களுக்குத் தாய்மார்களுமாகிய கிழவிகளிருந்தால், தங்கள் வீட்டில் இவ்வாறு தூக்கமே குடிகொண்டிருப்பதைப்பற்றி வயிற்றெரிச்சல்கொண்டு, காலை ஐந்து மணிக்கே எழுந்து உட்கார்ந்து, "இதென்ன இந்தக்காலம் விபரீதமாயிருக்கிறது; இவர்கள் வீட்டில் இலக்குமியை வரவழைப்பதைவிட்டு மூதேவியை வரவழைத்துக்கொண்டிருக்கிறார்களே! ஐயோ தெரு பெருக்காமல் கிடக்கிறதே; மாணிக்கம்! ஏனிப்படித் தூங்குகிறாய்? சுந்தரம்! எழுந்திரு; பாக்கியம்! இன்னுந் தூக்கமா?" என்று ஒன்பதுமணிவரை கூவிக்கொண்டே யிருக்கிறார்கள். புருஷரும், மனைவியரும் இடையிடையில் அந்தக் கிழவிகளின் கூக்குரலால் விழித்துச் சங்கடப்பட்டு, "ஓ கிழட்டுச் சவமே! பீடையே! பேசாமலிரு" என்று கடிந்து பேசிவிட்டுக் கண்ணை மூடிக்கொள்கிறார்கள். கிழவிகள் அதன்மேல் ஒன்றுஞ்செய்யமுடியாமல் வீட்டு வேலைகளை நிறைவேற்றி வருகிறார்கள். இத்தகைய கிழவிகள் இல்லாத வீடுகளிலோ அந்த நாகரீகத் தம்பதிகளின் இஷ்டமெதுவோ அதுதான் நடக்கும். எல்லோரும் காலை ஒன்பதுமணிக்கு மேலே தான் படுக்கையைவிட் டெழுந்திருப்பார்கள். அவர்களுடைய குடும்பகாரியங்களோ "சிறுவீடுகட்டி யதினடு சோற்றை யுண்டுண்டு தேக்கு சிறியார்கள்" செய்யும் இல்லறகாரியங்களைப்போல வெகு விநோதமாக நடந்து வருகின்றன.

இந்த அநுசாரங்கள் இவர்களிடம் தங்குவதால் இவர்களுள் ஆடவர்கள் தங்கள் தொழில்களைக் கவனியாமல் விட்டுவிடுகிறார்கள். பெண்களும் தங்கள் குடும்பகாரியங்களைக் கவனியாதவர்களாகின்றார்கள். பெரியோர்கள் தேடிவைத்த பூஸ்திதிகளிருந்தால் தங்கள் ஜீவனத்தின்பொருட்டு அவற்றைத் தொலைத்துவிடுகிறார்கள். அதன்மேல் அவர்கள் வீட்டில் மூதேவி குடியேறுகிறாள்; எங்கும் குப்பைகள் மலிந்து கிடக்கின்றன; இரவில் விளக்கெரிவதில்லை. ஸ்திரீகளுக்குரிய முக்கிய கடமைகளும், ஆடவர்க்குரிய ஒழுக்கங்களும் அடியோடு தொலைந்து போகின்றன; எந்நாளும் இவர்கள் வறுமைத் துன்பத்திலாழ்ந்து வருந்துகிறார்கள். பெண்கள், மதியின்மையால் தங்கள் முக்கியகடமைகளைக் கைநழுவவிடினும் ஆடவர் அறிவுடையவர்களாயிருந்தால் அவர்களைத் திருத்திக் கொள்ளலாம்; அவர்களும் புதுப்போக்குடையவர்களாதலின், தாங்களும் அப்பேதைப் பெண்கள் போன்றவர்களாகி இல்லறத்தைப் புல்லறமாக்கிவிடுகின்றனர். இத்தகைய விநோதகுடும்பங்களை நாம் பிரத்தியக்ஷமாகப் பார்த்து வருகின்றோம்.

பல புத்திமான்கள் பெண்களுக்குச் சுயேச்சை கொடுக்க வேண்டுமென்ற கொள்கையை எங்கும் பரப்பிப் பல நன்மைகளை உண்டாக்கி வருகின்றார்கள். ஸ்திரீ சுதந்தரமாவது, அரிவையரை அடிமைத்தனத்தினின்றும் நீக்கி, கல்வியில் விருத்தியடையச் செய்து, குடும்பகாரியங்களிலும், மற்ற தொழில்களிலும் தங்கள் ஒழுக்கங்குன்றாது சுயேச்சை பெற்றிருக்குமாறு செய்வதேயாம்.

இக்கருத்தினை மந்தமதியினர் வேறுவழியிற் றிருப்பி அவர்களை இவ்வாறு தீயஒழுக்கங்களிற் புகவிட்டுத் தாங்களும் கெட்டொழிகின்றனர். இத்தகையினர் எவ்விடத்தும் சுகம்பெறார். ஆதலின், அறிஞர், சில குடும்பங்களிலுள்ள இத்தகைய ஒழுக்கக் கேடுகளைநீக்கிப் பெண்மக்கள் நெறியறிந்தொழுகுமாறு செய்வார்களாக.

ஓம் தத் ஸத்.

## சந்தாநேயர்களுக்கு அறிவிப்பு.

### 12-வது ஆண்டு.

நேயர்களே! இந்த அக்ஷயஞூ அடுத்த ஆடிமீ கவ (16—7—26) நம் ஆனந்தபோதினிக்கு 12-வது ஆண்டு பிறக்கப்போகிறது. ஆதலின் சந்தாநேயர்கள் ஷை 12-வது ஆண்டின் சந்தாத் தொகையை அடுத்த ஆனிமீ

௧௨ (15—6—26) க்குள், மணியார்டர் மூலமாகவோ, நேரிலோ நமக்கு வந்து சேரும்படி அனுப்பிவிடக் கோருகிறோம். பத்திரிகை வேண்டாதவர்கள் ஷை 15—6—26 க்குள் நமக்குக் கார்டின்மூலம் அவ்விவரத்தைத் தெரிவித்துவிடவேண்டும். மேற்கூறியபடி சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பிவிடுகிறவர்களுக்கு அடுத்த ஆனிமீ சஞ்சிகையும், அக்ஷய வருட சஞ்சிகைகளும் சாதாரண போஸ்டில் அனுப்பப்பட்டுவரும். பத்திரிகை வேண்டாமென்று தெரிவித்தவர்களுக்கு அடுத்த ஆனிமீ சஞ்சிகை மட்டும் சாதாரண போஸ்டில் வந்துவிடும். மேற்கூறியபடி சந்தாத் தொகையை அனுப்பாதவர்களுக்கும், பத்திரிகை தங்களுக்குத் தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காதவர்களுக்கும், அடுத்த 12-வது ஆண்டின் சந்தாவுக்கு அடுத்த ஆனிமீ பத்திரிகை வி பி யி லனுப்பப்படும். இவர்கள் தங்களுக்குப் பத்திரிகை வேண்டாமென்ற விவரத்தைத் தெரிவிக்காமலிருப்பதாலும் சந்தாத் தொகையை அனுப்பாமலிருப்பதாலும் பத்திரிகையை வி.பி. யில் பெற்றுக்கொள்ள இஷ்டமுடையவர்களாயிருக்கிறார்களென்றே நாம் நம்பி இவர்களுக்கு வி.பி. யனுப்புவதால் இத்தகைய நண்பர்கள் வி.பி. யைத் திருப்பிவிடாமல் பெற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொள்கிறோம். இங்ஙனம் வி.பி யை ஏற்றுக்கொள்கிறவர்களுக்கும் அக்ஷயஞு சஞ்சிகைகள் மாதந்தோறும் வழக்கம்போல் அனுப்பப்பட்டுவரும். வி.பி. யில் 3-அணு அதிகச் செலவும், பத்திரிகைவந்து சேர்வதற்கு வீண்காலதாமதமும் நேர்வதால் பெரும்பாலும் முன்பண மனுப்பிவிடுவதே நலமென்பதை நேயர்கள் கவனிக்கவேண்டும்.

இங்ஙனம் முன்பண மனுப்பாமலும், பத்திரிகை தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காமலும் இருந்துவிட்டு வி.பி. வரும்போதும் அதைப் பெற்றுக்கொள்ளாமல் திருப்பிவிடுகிறவர்களுக்கு முன் சந்தாவுக்குச் சேரவேண்டிய ஆனிமீ பத்திரிகை சேராமல் திரும்பிவிடுவதோடு, நமக்கும் வீணுகப் போஸ்டேஜ் நஷ்டமுண்டாகிறது. ஆதலால் நண்பர்கள் மேற்கூறிய விஷயங்களைக் கவனித்து நடந்துகொள்ளும்படி வற்புறுத்திக் கூறுகிறோம்.

சந்தாதாரர்களுக்கும், நமக்கும் வீண்கஷ்டமும் நஷ்டமும் உண்டாகாதிருக்கும்பொருட்டே நாம் புதுவருடம் பிறப்பதற்கு இரண்டுமாதங்களுக்கு முந்தியே இவ்விஷயங்களைத் தெரிவிக்கிறோம். இப்படித் தெரிவித்தும், சில நண்பர்கள் இவ்விஷயங்களைக் கவனித்து முன்பண மனுப்பாமலும், பத்திரிகை தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காமலுமிருந்துவிட்டு வி.பி. போகும்போது அதைத் திருப்பி நமக்கு நஷ்டத்தை உண்டாக்கிவிட்டுத் தங்களுக்கு ஆனிமீ சஞ்சிகைவந்து சேரவில்லையென்று நம்மீது குறை கூறுகின்றார்கள். சிலர், இந்த அறிவிப்பைப் பார்த்திருந்தும் பேசாமலிருந்து வி பி. யைத் திருப்பிவிட்டு, "நாங்கள் பேசாமலிருப்பதே பத்திரிகை தேவையில்லையென்பதற் கறிகுறி; அதைப்

பத்தி நாங்கள் அரையணு செலவுசெய்து கார்டின்மூலம் தெரிவிக்கவேண்டியதில்லை; நீங்கள் ஏன் எங்களுக்குக் கார்டு எழுதித் தெரிவித்து எங்கள் சம்மதத்தைக்கேட்டுத் தெரிந்துகொண்டு வி பி. யனுப்பலாகாது? ஆதலால் நீங்கள் வி.பி. யனுப்பி எங்களுக்கு ஆனிமீ சஞ்சிகைசேராமல் திரும்பிவிடும்படி செய்தது நியாயமாகாது'' என்று குதர்க்கமான லெட்டர்கள் எழுதுகிறார்கள்.

நண்பர்களே! இவற்றில் நீங்கள் சில விஷயங்களைக் கவனிக்கவேண்டும். இந்த அறிவிப்பை நாங்கள் இரண்டுமாதங்களில் வெளிப்படுத்தியும், முன்பண மனுப்பாமலும், பத்திரிகை தேவையில்லை யென்பதைத் தெரிவிக்காமலு மிருப்பவர்கள் நிச்சயமாக வி பி. பெற்றுக்கொள்ள இஷ்டமுள்ளவர்களென்றே எங்களால் கருதப்படுகிறார்கள். அவர்கள் ஏதோ அசந்தர்ப்பத்தால் முன்பண மனுப்பமுடியாம லிருந்துவிட்டார்கள் என்று கருதியே நாங்கள் அவர்களுக்கு வி.பி யனுப்புகிறோம். சிலர் குதர்க்கமாய் லெட்டர் எழுதுகிறபடி இவர்களெல்லோரையும் பத்திரிகை வேண்டாதவர்களென்று நாம் எப்படிக் கருதிவிடமுடியும்? இவர்களுள் சிலரே, கவனியாமையாலோ, வீண்குதர்க்க புத்தியாலோ இந்த அறிவிப்பின்படி நடப்பதைவிட்டுப் பத்திரிகை வேண்டாமென்னும் எண்ணத்தை மனதில் வைத்துக்கொண்டிருந்து வி பி வந்ததும் திருப்பிவிடக்கூடியவர்களா யிருப்பார்கள். இவர்களை நாம் எப்படிக் கண்டுகொள்ள முடியும்? அப்படித் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால் முன்பண மனுப்பாத எல்லோருக்குமே கார்டனுப்பி வி.பி. அனுப்பலாமா அனுப்பக்கூடாதா என்ற விவரத்தை ஒவ்வொருவரிடத்தும் கேட்கவேண்டும். சிலர் செய்கையை முன்னிட்டு அதிகப் பணம் செலவிட்டு எல்லோருக்கும் கார்டனுப்ப முடியுமா? பதத்திரிகை வேண்டாதவர்கள் சிலரே இருப்பார்கள். அவர்கள் அவ்விவரத்தை அரையணுக் கார்டில் தெரிவித்துவிடுவது சுலபம். அதனுல் இருவகையாருககும் தொந்தரவிராது. நாம் எல்லோரிடத்தும் கார்டனுப்பி வி. பி. யனுப்ப அபிப்பிராயம் கேட்பதென்றால் அதிகப் பணச்செலவும் வீண்தொந்தரவுமுண்டாகும். இவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்துபாராமல் சிலர் குதர்க்கமான லெட்டர் எழுதுவது எவ்வளவு பொருத்தமானதென்பது அறிவுடையார்க்கு விளங்கும்.

ஆதலின், நேயர்கள் இந்த அறிவிப்பின் விஷயங்களைக் கவனித்துச் செய்யுமாறு மிகவும் மீண்டும் வற்புறுத்திக் கூறுகிறோம். பத்திரிகை தேவையில்லாத நண்பர்களும் வீண் குதர்க்கமும், நியாய விரோதமும் செய்வதைவிடுத்து அவ்விவரத்தைக் கார்டின்மூலம் மேற்குறித்த காலத்திற்குள் தயவுடன் தெரிவித்துவிடும்படி கேட்டுக் கொள்கிறோம்.

பினும், சிங்கப்பூர் முதலிய மலேயா நாடுகளுக்கு வி பி. இல்லையாதலின் அங்குள்ள சந்தாதாரர்கள் எல்லோருமே முன்பணம் அனுப்பிவிடவேண்டும்.

முன்பண மனுப்புவோர் பழய் சந்தாதாரர்களாயிருந்தால் தங்கள் சந்தா நம்பரைக் குறிப்பிட்டு அடுத்த 12-ஆம் ஆண்டுக்கு என்று எழுதி யனுப்பவேண்டும் புதிதாய்ச் சேருகிறவர்கள் புதிய ஆண்டுக்கு என்று எழுதவேண்டும். சந்தா நெம்பர் ஒவ்வொரு மாதத்திலும் வரும் சஞ்சிகை யின்மேல் உறையில் இருக்கும். அதைத் தெரிந்து எழுதவும். அதில் (1190) என்ற ரிஜிஸ்டர் நெம்பருமிருக்கும். அதை யெழுதிவிடாமல் சந்தா நெம்பர் என்று போட்டிருப்பதைப் பார்த்து எழுதவும். சந்தா நெம்பர் தெரியாதவர்கள் முன்பண மனுப்பாமல் வி.பி. யிலேயே சஞ்சிகை பெற்றுக்கொள்வது நலம்.

சஞ்சிகையை நிறுத்திவிட எழுதுவோரும் ஷை சந்தா நெம்பரைக் குறித்தெழுதவேண்டும். ப-ர்.

---

## தனித்தமிழும் ஆங்கிலமும்.

(281-ம் பக்கத் தொடர்ச்சி.)

தமிழ் எழுத்தில் ஆங்கிலக் கலப்பு:—சாதாரணமாக நடைபெறும் சம்பாஷணைகளில் ஆங்கிலம் யாதொரு தடையுமின்றிக் கலக்கப்படுவது போன்றே தமிழ் எழுத்துக்களில் (தமிழ் நூல்களில்) ஆங்கில வெழுத்துக்கள் (வார்த்தைகள்) கலந்தெழுதப்படுகின்றன. சம்பாஷணைகளிற் கலக்கப் படும் ஆங்கிலமாவது அந்தந்த நேரத்துடன் கழிந்துவிடும். என்றும் நிலவக்கூடிய தமிழ் நூல்களில் தமிழ்ப் பத்திரிகைகளிற் கலந்தெழுதுவது அந்நூற்கள் நிலவும்வரையில் அவைகளுங்கலந்து விளங்கிவரும். தமிழ் வார்த்தைகளில் ஆங்கிலங் கலப்பதைப்பற்றி முன்னர் வரைந்துள்ளதையே இதற்குங் கொள்ளலாம். தமிழ்நாட்டில் வழங்கப்பெறாத நூதனப்பொருட் களின் பெயர்களையோ, அல்லது பிறநாட்டார்களுடைய நுட்பமான செய்கைகளைக் குறிக்கும் புதிய ஆங்கில வார்த்தைகளையோ மிகவும் அவசியமெனத் தோன்றியவிடத்துச் சில மேதாவிகள் தமிழுடன் கலந்து வருகின்றனர். அதற்கு வேறு வழி யின்மையால் அஃது ஒப்புக்கொள்ளக் கூடியதே. ஆனால் அத்தகைய அரிய வார்த்தைகட்கு அடுத்துத் தமிழுரையும் பொறிக்கப்படுதல் மிகவும் அவசியம்.

தமிழ் மொழியில் நூல்களையியற்றும் ஆசிரியர்களிற் சிலர் தம் நூல்களுக்கு மேல்பக்கம், முகவுரை, சிறப்புப்பாயிரம் முதலானவைகளைப் பிறநாட்டு மொழியாகிய ஆங்கில மொழியினாலேயே ஏற்படுத்துகின்றனர். இம்முறையானது நீர் தமிழ் நூல்களுக்குப் பெருங் குறையை யுண்டு பண்ணுவதாகும். தமிழ் மொழியில் நூலியற்றும் புலமைசெறிந்த ஆசிரியர்கள் தம் தாய் மொழியாகிய தமிழ்மொழியின் வளர்ச்சியைக்கருதி யுழைப்போர்களேயாவர். அவர்கள் தமிழ்மொழியில் நூலியற்றித் தமக்குத் தம் சொந்தமொழியின்மாட்டுள்ள அன்பைத் தமிழருக் கெடுத்துக் காட்டுகின்

றனர். அன்றியும் தமிழர்களது முன்னேற்றத்தையும் மொழி வளர்ச்சியையுங்கருதி நூல்களை வெளியாக்குகின்றனர். ஆகலின் இப்பெற்றியர் இயற்றும் நூல்களை வாசிக்கவேண்டியவர்களுந் தமிழர்களேயாவர்.

இஃதிங்ஙனமாக, தந் தாய்மொழியில் நூலியற்றித் தமிழர்களாகிய அன்பர்களுக்குப் பயன்படுத்துவான் போந்த நூலாசிரியர்களிற் சிலர், தங்கள் நூலுக்குப் பாயிரம் ஆங்கிலத்தில் இருக்கவேண்டுமென்று கருதி, அம்மொழியிலேயே தீட்டுகின்றனர். அன்றியும் அந்நூற்களுக்கு வேண்டிய சிறப்புரைகளையும் அவ் வாங்கில மொழியிலேயேபெற்றுப் பதிப்பிக்கின்றனர். இம்முறையும், தமிழ் நூற்களின் நலத்தைக் குறைப்பதாகும்.

எம்மொழியிலும் ஒரு நூல் வெளியிடப்படும்போது அதற்குச் சிறப்புறுத்த நூன்முகம், சிறப்புப்பாயிரம் இன்றியமையாதன. எந்நூலுக்குப் பாயிரமில்லையோ, அஃது எண்ணிறந்த பக்கங்களான் நிறைந்து தோற்றினும் ஓர் நூலாகமாட்டாது. ஒரு மாளிகைக்கு அதன்கட் டீட்டியுள்ள சித்திரங்களால் ஏற்படும் வனப்பைப்போலவும், மிகச் சிறந்த நகரத்திற்கு எழில் கொடுத்து விளங்குங் கோபுரத்தைப்போலவும், நாட்டியம் பயில்கின்ற நாரியின் நலத்தை மிகுவித்துக்காட்டும் அணிகலன்களைப்போலவும் ஒவ்வொரு நூலுக்கும் அதன்முகத்தில் ஓர் பதிகம் அமைந்திருப்பின் அந்தந்த நூலையும், அதன் பயனையும் அழகுபடுத்திக் காட்டாநிற்கும்.

அப்பெற்றிய சிறப்புள்ள புனைந்துரையைத் தமிழில் வெளிவந்த ஓர் நூலுக்கு ஆங்கிலத்தில் வரைவது நீதியா? அதற்குவேண்டிய சிறப்புப் பாயிரங்களையும் பிறமொழியிலேயே கொள்ளப்படுவதும் முறையா? நூல் இயற்றும் நாடு—தமிழ்நாடு; நூல் இயற்றப்படும் மொழியும்—தமிழ்மொழி; நூலுக்கு ஆசிரியரும்—தமிழர்; நூலை வாசிப்பவர்களுந் தமிழர்களே! இவைகளையும் நோக்கும்போது யாவுந் தமிழ்மயமாக விளங்க, நூலுக்கு மேல் பக்கமும், முகவுரையும், சிறப்புப்பாயிரமும் ஆங்கிலமொழியில் பதிப்பித்தல் அழகாமோ! இத்தகை நூலைப் பார்க்குமிடத்து மேற்பக்கத்தில் ஆங்கிலமும், உள்ளே திறந்ததும் இரண்டு மூன்று ஏடுகளில் ஆங்கிலமும், மற்ற ஏடுகளிலெல்லாந் தெய்வத்தன்மைவாய்ந்த தீந்தமிழ் மொழியுமாக விளங்கும்.

தமிழ் நூலை வாசிக்கப்புகும் அன்பர்களிற் சிலருக்கு அன்னிய பாஷாபிவிருத்தி யுண்டாயிருக்கலாம்; பலருக்கு அஃதில்லாமலு மிருக்கும். ஆகவே ஆங்கிலந் தெரியாதார் தமிழ்நூலை வாசிக்கப்புகுங்கால் அந்நூலின் தன்மை, அதன் ஆசிரியரின் உள்ளக் கிடக்கை, அதை வாசிப்போர் பெறும்பயன் முதலியவைகளை யறிந்துகொள்வதற்கு அன்னியமொழியினலாகிய முகவுரை, சிறப்புரைகளெல்லாந் தடையாக நிலவுகின்றன. பிறமொழியிற் பதிக்கப்பட்டுள்ள கருத்துக்கள் யாவுமிருந்தும் அன்னிய பாஷைப் பழக்கமற்றவர்களுக்கு அவை இல்லாதவைபோன்று தோற்றுகின்றன.

ஆனால், ஒருசாரார், தமிழ் நூலுக்கு ஆங்கிலமுகவுரை முதலியவைக ளிருப்பின் ஆங்கிலங்கற்ற நண்பர்கட்கு உதவுமன்றோ? எனலாம். ஆம்; உதவும். தமிழில் இருந்தால் தமிழ்நூலை வாசிக்கப்புகும் சத்திவாய்ந்த ஆங்கிலங்கற்ற நேயர்கட்கு உதவாமற் போகுமா? ஆங்கிலங்கற்ற ஒரு சாரார்க்கு உதவி, அஃதறியாத பலருக்கும் உதவாமற்போவதைப் பார்க்கி லும் இருதிறத்தார்க்கும் உதவும்வண்ணந் தமிழிலேயே அவைகள் அமைந் திருப்பின் எத்துணை நன்மையுண்டாகும்! இதுதவிர, சில நூலாசிரியர்கள், தங்கள் நூலுக்குச் சிறப்புரை தருமாறு, ஆங்கிலங் கற்று மிகுந்த மேதாவிக ளாகிய பட்டதாரிகளிடஞ்சென்று கேட்கின்றனர். அப்பெரியார்களும் தமிழ்நூலுக்கு மதிப்புரை, தமிழிற்றருவதைத் தவிர்த்து ஆங்கிலத்தி லேயே தருகின்றனர். இதனாலுந் தமிழ்நூலுக்கு வேண்டிய அமைப்பு மாறுகின்றது.

இன்னுஞ் சிலர், தங்கள் பெயர்களை நூல்களிலும், பத்திரிகைகளி லும் தமிழும் ஆங்கிலமுமாகக் கலந்தே வரைகின்றனர். சிலருக்கு இஃ தோர் மதிப்புடைய செய்கையாகத்தோற்றும்! ஆங்கிலத்திலேயே நடை பெறும் நிகழ்ச்சிகளுக்குக் கையெழுத்து, விலாசம் முதலியவைகளை ஆங்கி லத்திலேயே வரையவேண்டியது அத்யாவசியமே. அம்முறையைத் தமி ழிற் கொண்டுவந்து சேர்ப்பது அழகாகுமா? அவசியமில்லாத இடங்க ளாகிய தமிழ் நூல்களிலும் பத்திரிகைகளிலும் ஆங்கிலப்பிரயோகம் நீங்கி வருதல் தமிழின் அழகு அதிகப்படுவதற்கு ஓர் வழியாகும்.

ஆகவே, இக்கட்டுரையைக் கண்ணுறும் அன்பர்கள் பலவேறு அபிப் பிராயபேதங்களைக் கொண்டிருப்பவர்களாகலின் இதன்கண் சிலருக்கு வெறுப்புந் தோற்றா நிற்கும். ஆயினும்,

"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
யுண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்."

என்ற பெரியாரின் திருவாக்கான் தெய்வத் தமிழ்மொழியின் இயற்கை யான தெய்வீகசக்தியை யுணர்ந்து, அதற்கு நேர்ந்த இடுக்கண்கள்நீங்க இனியேனும், அத்தகைய பிறநாட்டுத்தொடர்பு இல்லாமலிருக்கும்வண் ணஞ்செய்து கூடியவரையில் தமிழைக் கெடுக்காமல் எச்சரிக்கையாக வளர்த்துவர வேண்டியது தமிழரனைவர்க்கும் இன்றியமையாததாகும்.

தமிழுக்காகவே பதினோராண்டாக உழைத்துவரும் ஆனந்தபோதினி யும், தன்னைப் பிறமொழியில் அலங்கரிப்பவர்கள் தமிழ் மொழியாலேயே அலங்கரிக்கும் வண்ணம் அவர்க்கு நினைப்பூட்டுவதும் நலமெனத் தோற்று கிறது. ஆனந்தபோதினியினுடைய சர்வாலங்களையுங் கோரி யுழைத்து வரும் எமது அன்பார்ந்த பத்திரிகாசிரியரவர்களும் அதன்பால் பதிப்பதற் காகவருங் கையெழுத்துக்கள் முதலியவைகளைத் தமிழிலேயே எழுதி

வரும்படி விஷயதானிகளுக்கு ஞாபகமூட்டுமாறும், ஆங்கிலத்தினால் வரக் கூடிய கையெழுத்துக்களைத் தமிழிலேயே பதிப்பிக்குமாறும் மிகுந்த வணக்கத்துடன் கேட்டுக்கொள்கின்றேன்.

மூ. மாணிக்க நாயகர், தமிழாசிரியர்; திருப்புவனை, புதுவை.

---

## செல்வமும்—வறுமையும்

(347-ம் பக்கத் தொடர்ச்சி.)

"முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார்"—என்பது தமிழ் மூதுரை; "முயற்சி திருவினை ஆக்கும்; முயற்றின்மை இன்மை புகுத்திவிடும்"—; "ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித் தாழா துஞற்றுபவர்"—என்பன உத்தரவேதப்பாக்கள். "தளரா ஊக்கத்தொடுகூடிய தன் முயற்சியால், பல அரிய நலன்களும், எத்தகைய கேட்டுக்கும் காரணமாகாத போதியபொருளும் இனிதுவந் தெய்தற்பாலன"—என்பது முன்னோர் அநுபவ அருள் உரை. ஆனால், கலி முற்ற, முற்ற அவ்வனுபவம் தலை கீழாகி, மனிதர்களுட் பெரும்பான்மையோர், பரிதி ஒளிபரப்பும் பகல் முப்பதுநாழிகையும் ஓய் வொழிவின்றிப் பாடுபட்டும், தமது குடும்பத்தினரின் பசிப்பிணியைத் தணிக்கக்கூடப் போதிய அளவின்றி, சுருங்கிய வருவாயைப்பெற்றுக் காலந்தள்ளும், ஏழைத்தொழிலாளரும், தாழ்த்தப்பட்ட வகுப்பினருமாய் நிலவுகின்றனர். அந்தோ! இத்தகையோரை வருத்தி, ஏவல்கொள்ளும் முதலாளிகளும் மிராசுதாரர்களும், இவ்வேழைமக்களது உழைப்பின்பயனாக மிகுத்த இலாபத்தைப்பெற்றுச் செருக்கிக் களித்துக் கிடப்ப, "நெற்றி வியர்வை நிலத்தில் விழ", உழைத்த இவ்வேழைகள் தமது முயற்சிக்குத்தக்க வளவிற் பாதியேனும் ஊதியம் பெறும் பாக்கியமின்றிப் பரதவிப்பாராயினர். என்னே! இவ்வேழை வேலையாட்களின் தலை எழுத்திருந்தவாறு! பொதுவாகக் கூறுமிடத்து, 'பாடுபட்டுழைப்ப தொருதேசம்—அந்தப் பலனை புசிப்பதொரு தேசம்"—என்று ஒருவர் பாடியவாறு, 'விளைபொருள்களின் களஞ்சியம்' எனும் இந்தியநாடு-'பொன் விளையும் பூமி! என்னும் பரதகண்டம்'—இதுகாலை, அப்பெருமை இழந்து 'மணித்திருநாடாக' இருந்த காலம்போய், 'பிணிப்பெரு நாடாக' வாடுதல் பலரும் அறிந்ததே. இனி, வறுமையைப்பற்றிச் சிலவற்றைக் குறிப்பிடுவாம்.

"இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்—இன்மையே இன்னாதது"—எனத் தெய்வப்புலமைத் திருவள்ளுவனார், அருளியவாறு, மனிதர்க்கு வறுமையினும் மேற்பட்ட துன்பம் இல்லை. இதனாலன்றோ, "கொடிது, கொடிது, வறுமை கொடிது"—என்றனள் ஒளவையும். அஃது, மனிதரின் அருளையும், அன்பையும், மானத்தையும் மறைத்து அவர்களைத் துன்பத்திலேயே புகுவித்து, உழல்வித்தலால், இம்மைப்பயனையும், மறுமைப்பயனையும் எய்தவொட்டாது தடுக்கவல்லது. வறுமையின் வன்மை,

அளவிடற்பாலதன்று. அது சிறந்த முயற்சி புடையானையும், இழிந்த சோம்பலிற் புகுத்தும்; நல்லொழுக்க முடையானையும், புல்லொழுக்க முடையானாக்கும்; நற்குடிப்பிறந்தாரிடத்தும், அவமானச் சொல் பிறத்தற்குக் காரணமாய சோர்வினை விளைவிக்கும்; கல்வி, கேள்விகளையும், சில சமயங்களில் மறைக்கும்; மனிதன் மதிப்பையும், உற்சாகத்தையும் குலைத்து, எவரிடத்தும் இரக்க அவனைத் தூண்டும். இதன் கொடுமைகள், எம்மனோரால் அளவிடற்பாலனவோ? இத்தகைய வறுமையடைந்து,

"பல்லெலாந் தெரியக் காட்டிப் பருவரல் முகத்திற் கூட்டிச்
சொல்லெலாஞ் சொல்லி நாட்டித் துணைக்கரம் விரித்து நீட்டி
மல்லெலாம் அகல வோட்டி மானமென் பதனை வீட்டி
இல்லெலாம் இரத்தல் அந்தோ இழிவிழி வெந்த ஞான்றும்"

என வரூஉம், குசேலோபாக்கியானப் பாடலுக்கு இலக்கியமாக, இதுகாலை செல்வர் வாயில் தோறும் சென்று பயன் இன்றி, பசிப்பிணியாற் பாதிக்கப்பட்டு எத்துணைப்பேரோ அலைகின்றனர். இவருட் சிலர், உடற்குறை, பிணி முதலியவற்றால் எத்தொழிலும் செய்ய முடியாதவராய் இரவலராகின்றனர். பலர் வேலைசெய்யப் போதிய உடல் உரம் வாய்க்கப்பெற்றவர்களாயிருந்தும் அங்கவீனமேனும், பெரும் பிணியேனும் இல்லாதவர்களாயிருந்தும் சோம்பலினால் தொழில் செய்தலின்றிப் பிச்சையாளராகின்றனர். இது மிக்க மதியீனம். இங்ஙனம் சோம்பலைப்பூண்டு அலைந்து திரியும் ஏழைச் சகோதரர்கள், 'ஏற்பதிகழ்ச்சி' ஆகலான், கேவலம், இம்மையிலும், மறுமையிலும் வெம்மையே பயக்கும் இழிபுடைய சோம்பலை உதறித் தள்ளிவிட்டு, தங்களால் இயன்றவளவில், தளரா ஊக்கத்தொடும், குன்றா முயற்சியொடும், காந்தியடிகள் போதிக்கும் 'சர்க்கா' சுழற்றுதலிலேனும், வேளாண்மைத் தொழிலிலேனும், பிறநலந்தரும் கைத்தொழில்களிலேனும் இறங்கி, தீவிரமாக உழைத்து, மானத்தோடுகூடிய 'சுதந்தர' வாழ்க்கையை நடாத்த முன் வரல்வேண்டும்; இறைவன், இவர்களுடைய நன்முயற்சிக்குத்தக்க ஊதியம் இவர்களுக்கு அளிப்பான். செந்தமிழ்நாட்டுச் செல்வச் சீமான்களும், இத்தகையோருக்கு வெறுஞ்சோறுமட்டில் இட்டு இவர்களைச் சோம்பேறிகளாக்கிவிடாது, நலந்தரும் வேலைகளிற் புகுத்தி, இவர்களின் உழைப்புக்குத்தக்க ஊதியம் தந்து, மானத்தோடு வாழ்வு நடாத்தலில், இவர்கட்கு உருசியையும் உற்சாகத்தையும் ஊட்டி, இவர்களுடைய வறுமைப்பிணியை ஓட்ட முன்வரல்வேண்டும். அங்ஙனம் வரின் ஏழைபங்காளன் இவர்க்கு இன்னருள் பொழிவான். கல்வியிற் சிறந்த புலவர்களுங்கூட, ஜீவனோபாயத் தொழில்களைக் கவனியாததால் தரித்திரத்துக்குள்ளாகி அந்த வறுமைப்பிணியால், செல்வர்களைப் பாடிச் சில சமயங்களில் அவமான மடைவாராகின்றனர். "என்னாவது எத்தனை நாளைக்குப் புலவீர்காள்!—மன்னா மனிசரைப் பாடிப்படைக்கும் பெரும் பொருள்"—என ஆழ்வாரும், "பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை

புகலூர் பாடுமின் புலவீர்காள்.........அம்மையே சிவலோக மாள்வதற்கு யாதும் ஐயுறவில்லையே''—எனச் சுந்தரமூர்த்திகளும் அருளியவாறு, மானிடம் பாடுவது மேன்மையுடைத்தன்றாகலின், பண்டைக்காலத்துச் சங்கமருவிய சான்றோர் பலரும், மனிதரைப்பாடாமல் வாணிகம், கைத்தொழில், நெசவு முதலிய தொழில்களை மேற்கொண்டு, சுயேச்சையாக மானத்தோடு வாழ்வை நடாத்தி வந்தார்கள். ஆதலின் இக்காலத்துப்புலவர்களும் நரஸ்துதிபாடி வறுமைக்குள்ளாகாமல் அத்தகைய தொழில்களுள், ஊக்கங்கொண்டு இறங்கி உழைத்துச் சுதந்தர வாழ்வை நடாத்த முன்வரவேண்டும். இறைவனைப் பாடியும், மறைந்தும், தாழ்ந்தும் கிடக்கும் கலைசெல்வத்தை, மக்களுக்குப் புத்துணர்ச்சி பொங்கும் வகையில் வெளிக்கொண்டுவந்தும், தமிழ்த்தாய்க்குப் பலவழிகளிலும் பணிசெய்தும் பொன்றாப்புகழ் நிறுவவேண்டும். ஆதலின், செந்தமிழ்நாட்டுச் செல்வர்களே! இதுகாறும், ஆடம்பரவாழ்வில், பொருளைவாரி இறைத்துக் களித்துச் செருக்கிக் கண்மூடி உறங்கியது போதும்! போதும்!! பாரதமணித்திருநாடெங்கணும், காந்தியடிகளது தெய்விக இயக்கம் பரவிவரும் இந்நாட்களில், ஈந்து உவத்தலே உண்மை இன்பமென்பதை உணர்ந்து, அரை வயிற்றுக் கஞ்சிக்கும் அலைந்து திரியும் வறியோர்க்கு—வயிற்றை வளர்க்க, வெளிநாடுகளுக்கு ஓடும் ஏழைகட்கு—மானத்தை மறைக்கப் போதிய துணியுமின்றிப், பனியால் நனைந்து, வெயிலாலுலர்ந்து பரதவிக்கும் பாமரர்கட்கு—இரங்கி வேளாண்மைத் தொழிலில், உழைப்புக்குத்தக்க ஊதியமளித்தும், அவர்கள் சர்க்கா சுழற்ற அவர்களைத் தூண்டி, இராட்டினங்களை அவர்களுக்கு இலவசமாக அளித்தும், பஞ்சுவாங்கிக்கொடுத்தும், எத்தகையோராயினும் பசித்து வருவாராயின் அவர்க்கு வயிறார உணவிட்டும், தாய் மொழியின் வளர்ச்சிக்குப் போதிய பொருளுதவி புரிந்தும், பிற பல அறவழிகளிற் செய்யத்தக்கனசெய்தும், நீவிர்பெற்ற செல்வத்தாற், பெறற்பாலனவாய உண்மைப்பேறுகளைத் தேடிக்கொள்ளுங்கள். ''அற்கா இயல்பிற்று செல்வம்; அதுபெற்றால்—அற்குப ஆங்கே செயல்''—எனச் செந்நாப்போதார் செப்பியவாறு, சிறிதும் காலந் தாழ்த்தாது இன்றே, இன்னே—''அறஞ்செய விரும்பி'' ஆண்டவன் அருளுக்கு உரியராகுங்கள்.

ஆ. வ. பதுமநாப பிள்ளை,
''திருமகள் நிலையம்'' ஆர்யூர், (விழுப்புரம் தாலுகா.)

---

## ஆரிய சித்தாந்தம்.

(353-ம் பக்கத் தொடர்ச்சி.)

### குரு.

பிதிர்யக்ஞம் கூற வெடுத்துக்கொண்ட யாம் அதைச் சற்று நிறுத்தி வைத்து வேறு விஷயத்தைப்பற்றிச் சிறிது கூறிப் பிறகு தொடர்வோம். எல்லா விஷயத்துக்கும் குரு பிரதானம். குருவில்லாத வித்தை எதுவும்

பயன்படாது. குருவில்லாதவன் தன் புத்தியினுற் செய்யும் கருமம் ஒன்றும் பயன்படாது. எண்டு வித்தை என்றது நமது மதத்தைப்பற்றிக் கூறும் வேதம், வேதாங்கம், ஸ்மிருதி, புராணம், இதிகாசம், வேறு கலைஞானங்களுமாம். இதைக் கூறினுல் இக்காலத்தாருக்குப் பரிகாசமாகத் தோன்றும். நாம் உண்மையை வெளியிட வெழூந்தோமாதலால் அதைக் கவனியாமல் கூறுகிறோம். ஏனெனில் இந்தச் சாத்திரங்கள் இந்த ஜன்மத்தில் அல்லது ஜன்மாந்திரத்திலாவது பரமானந்த மோட்ச சுகத்தைக் கொடுக்கக்கூடியனவாதலால் இந்தச் சாஸ்திரங்களையே ஆரியர் அப்பியாசிக்க வேண்டியவர்கள். இதைக்கல்லாமல் பிறர் கூறும் சாஸ்திரங்களைக் கற்றுக் குதர்க்கவாதியாய்த் தர்மார்த்த மோட்சநூல்களை யிகழ்கிறவன் நரகத்தையே அடைவான். வேதத்தை ஓதவும் சாஸ்திரங்களைப் படிக்கவும் இக்காலத்தவர்க்கியலாது. ஏனெனில் ஜீவனுர்த்தத்துக்காகப் பொருள் தேடவேண்டிய கட்டாயம் நேர்ந்துவிட்டது. ஆதலால் பொருள் தேடுவதற்கு வேண்டியவைகளையே கற்கவேண்டி யிருக்கிறது. இப்போது ஆசிரியர்களுக்கு நிர்ப்பந்தமும் ஆபத்துமான காலமாம். ஆதலால் வேதாதி கலைகளைக் கற்க அவகாசமில்லை என்னலாம். அது உண்மையே. அதற்கு முன்னேரால் ஏற்படுத்தப்பட்ட விதிகளுமுண்டு.

அது ஒவ்வொருவரும் பரம்பராக்கிரமமாகவரும் குலாசார தர்மங்களைக் கைவிடாமல் அனுஷ்டிப்பதேயாம். பிராமணன் வேதாதிகளை யோதாதவனுயினும் சந்தியாவந்தனுதி நித்தியகருமங்களைத் தவருமல் அனுஷ்டித்துக் காயத்திரி மஹா மந்திரத்தை முறைப்படி ஜபித்து வருவானேயானுல் அவன் வேதாதி சகல கலைகளையும் ஓதின பலனை அடைந்து, சொர்க்காதி புவன போகங்களையும் அனுபவித்து ஜன்மாந்திரத்தில் முத்தியையும் பெறுவான். காயத்திரி, மந்திரங்களுக்கு மாதாவாகவும், வேதத்துக்கு மூலமாகவும் உள்ளது. ஆதலால் அதைமாத்திரம் விடாமல் திரிகாலங்களிலும் ஜபித்துவந்தால் அவன் நற்கதி பெறுவான். ஏனையவர் தத்தம் வருணத்துக்கும் குலாசாரத்துக்கும் ஒத்தபடி அனுஷ்டானங்களைச் செய்து வரவேண்டும். இதுசெய்தால் அவர்கள் புண்ணியசாலிகளாவார்கள். இதுவும் செய்யமுடியாதென்ருல் அது அவர்கள் கர்மவசம் என்று கழிக்கவேண்டியது. இவ்விதம் ஓதி யுணர்ந்தவர்கள் குருபக்தி யுடையவர்களா யிருக்கவேண்டும். குரு இன்னுர் என்பது கீழே கூறப்படும்.

நிஷேகம் முதலிய கிரியைகளை முறைப்படிசெய்து அதனுல் பிறந்த பிள்ளைக்கு அன்னம் ஊட்டி வளர்ப்பவன் அந்தப்பிள்ளைக்குக் குரு என்று மனு கூறினுர். இதனுல் பெற்ற பிதாவே குரு என்று விளங்கும். உபநயனம் செய்வித்து வேதங்களையும் கல்ப சூத்திரங்களையும் இரகசியார்த்தங்களுடன் உபதேசிக்கிறவனும் குருவாவான். ஆசாரியன் பத்து உபாத்தியாயருக்கும், பிதா நூறு ஆசாரியனுக்கும், தாய் ஆயிரம் பிதாவுக்கும்

சமானமாகிறார்கள் என்று மனுவே கூறினர். குருமார் எல்லாரையும்விடத் தாய் சிரேஷ்டமானவள் என்பது நூல்களின் கருத்தும், நூல்களை யோதி யுணர்ந்த பெரியோர்களின் கருத்துமாம். அது எதனால் எனில் ஈண்டுவிரிக் கிற் பெருகுமாதலால் மற்றொரு தடவையில் அதை விளக்குவோம். இதனு லேயே மனிதர் தாயினிடத்தில் மிக நன்றியறிதலுள்ளவர்களா யிருக்க வேண்டுமென்று மனுவே கூறினர். ஸம்ஸ்காரகிரியைகள் எல்லாவற்றையும் செய்து வேதோபதேசம் செய்தவனே குருவாவான். (இதனாலும் பிதாவே குரு என்பது பெறப்படுகின்றது). உபநயனமானபின் வேதத்தை ஓதுவிக் கிறவன் ஆசாரியன் எனப்படுவான்; ஏதாவது சில பாகத்தைப் படிப்பிக் கின்றவன் உபாத்தியாயன் எனப்படுவான் என்று யாக்ஞவல்கியர் கூறினர். தனக்கு மூத்ததமையனும் பிதாவுக்குச் சமான குரு. ஆதலால் அவன் தனது தம்பிமார்களைத் தகப்பனைப்போலவே இரட்சிக்கக் கடமைப்பட்டவனும். தம்பிகள் பயபக்தி விசுவாசத்துடன் அவனுக்கு அடங்கி நடக்கவேண்டும். புத்திரனுக்குப் படிப்பு முதலியன கொடுத்து உதவாத அயோக்கியனை தகப்பன் குரு ஆகமாட்டான் என்று மனு முதலியோர் சொன்னார்கள்.

காசு வாங்கிக்கொண்டு வித்தையைக் கொடுக்கிறவன்தான் உபாத்தி யாயன். விஷ்ணுவும் இப்படியே கூறினர். தேவலர், குரு இருவகைப்படுவர் என்று கூறி விஸ்தரித்தார். இருவகையாவது ஸ்திரீ புருஷர்களாம். உபாத்தியாயன், பிதா, பெரியதகப்பன், அரசன், மாமன், மாமனார், பயத்தி னின்றும் விடுவித்தவன், மாதாமகன், பிதாமகன், முதல் வருணத்தார், தகப்பனுடன் பிறந்தவர்களாகிய இவர்கள் புருஷர்களிற் குருவாவார். மாதா, மாதாவைப்பெற்றவள், இவர்கள் பெண்களுள் சிரேஷ்டகுருவாவர். தகப்பனுடன்கூடப் பிறந்தவள், தாயுடன் பிறந்தவள், மாமியார், பிதாமகி, அக்காள், பால்கொடுத்து வளர்த்தவள் இவர்களும் பெண்களில் குரு வாவார்கள். இவ்வாறு குருவர்க்கம் இருவகைப்படும் என்றும், இவர்களுள் ஐந்துபேர் உத்தமர்கள் என்றும், அவர்கள் யாரெனில் மந்திர முதலியன உபதேசித்தவரும், தாயும், வேதாதிவித்தைகளை உபதேசித்தவரும், மூத்த தமையனும், எஜமானனுமாவர்; அவர்களுள் மந்திரோபதேசஞ் செய்த வரும், வித்தையை அளித்தவரும், தமையனும் சிறந்தவர்கள்; தாய் இவர் கள் எல்லாரையும்விடச் சிறந்தவளாவாள் என்றும் தேவலர் கூறினர். தகப் பன், தாய், இவர்களின் சகோதரி, மூத்தசகோதரி இவர்களைத் தாயைப் போலவே கருதவேண்டும். ஆனாலும் தாய் எல்லாரையும்விட அதிகமாய்ப் பூஜிக்கத்தக்கவள். தாயானவள் சிசுவைப் பத்துமாதகாலம் சுமந்து, அத னால் ஆகாராதிகளின்றி வருந்திப் பிரசவகாலத்தில் கடுந்துன்பமடைந்து பின் பிரசவிக்கிறாள். குழந்தையினால் சகிக்கப்படாத துன்பமடைந்தும், அதனிடத்தில் மிக்க ஆசையுள்ளவளாய்த் தன்னுயிரைவிட மேலானதாகப் பாவித்து அதைக் காப்பாற்றி வளர்க்கிறாள். ஆதலால் புத்திரன் நூறு வருஷகாலம் கஷ்டப்பட்டுத் தாய்க்குப் பணிவிடை செய்துவந்தாலும்,

அவள் தன்னிமித்தம் பட்ட துன்பத்துக் கீடாகாது என்று வியாசர் தாய் எல்லாரிலும் சிறந்தவள் என்பதைக் காரணத்தோடு விளக்கினார். மாதா பிதாக்களைவிடச் சாஸ்திரங்களையும் மந்திரங்களையும் உபதேசித்த குரு சிரேஷ்டராவார் என்று மனு கூறினார். ஏனென்றால் மாதா பிதாக்களின் சம்போக சம்பந்தத்தால் கருவிற்பதிந்து, கைகாலாதி அவயவங்களைப் பெற்றுவரும் சிசு பின் ஜனன மரணாதி துன்பங்களை யடையும். வேதோப தேச குருவோ வேதமந்திர ஸம்ஸ்காரத்தினால் மறு ஜனனம் வருவித்து எல்லாவற்றையும் உபதேசித்துப் பிரமஞானத்தை யுண்டாக்குகிறான். இத னால் குருவினால் கொடுக்கப்பெற்ற ஞான சரீரம் ஜனன மரண மற்றதும், புகழுடன் விளங்குவதுமாதலால் தகப்பனைவிடக் குருவே சிரேஷ்டன் என்று மனுவே கூறினார். இந்தக் குரு வயதில் சிறியவனானாலும் வயதில் முதிர்ந்த குருவைப்போலவே பாவித்து அவரைப் பூஜிக்கவேண்டும். இது விஷயமாக மனு ஒரு சிறிய கதை சொல்கிறார். அதாவது, அங்கிரஸ் முனிவர் எல்லாவற்றையும் கற்று வல்லவராயிருந்தார். அவருடைய சிறிய தகப்பன் பெரிய தகப்பன், அவரவர்களுடைய புத்திரர்களாகிய இவர்கள் அவரிடம் வித்தியாப்பியாசம் செய்து வந்தார்கள். வசந்தகாலத்தில் ஒரு நாள் அங்கிரஸ் தமது சிஷ்யர்களுக்குப் படிப்பிக்கும்போது அங்கிரஸ் அவர்களைநோக்கிப் 'பிள்ளைகளே! தெரிந்துகொண்டீர்களா?' என்று கூறி னர். அதைக்கேட்ட சிற்றப்பன் பெரியப்பன் முதலானவர்கள் அவரை வெறுத்துத் தேவர்களிடம்போய் இதைச் சொன்னார்கள். தேவர்கள் அவர்களை நோக்கி "அங்கிரஸ் உங்களைப் பிள்ளைகாள்! என்று கூப்பிட்டது நியாயமேயாம். ஏனென்றால் படிப்பில்லாதவன் வயதில் முதிர்ந்தவனா யிருந்தாலும் அவன் பாலனுக்குச் சமானமானவனே" என்றார்கள். கற்றறிந் தவன் வயதிற் சிறியவனானாலும் வெகுபேர்களுக்குக் கல்வியைப் போதித் துப் பிதாவாகிறான். வயது முதிர்ச்சியாலும், தலை நரைத்ததனாலும், அதிக [illegible]ம் சம்பாதித்ததனாலும் ஒருவன் குருவாகிறதில்லை. கற்றுணர்ந்த வனே பெரியவனும் குருவுமாகிறான் என்று கூறினார்கள். ஆசாரியன், பிதா, தாய், மூத்த சகோதரன் இவர்களை அவமானம் செய்யக்கூடாது என்பது பொதுவிதி. ஏனென்றால் இவர்கள் முறையே ஈசுவரன், பிரமா, பூமி தேவி, பிதிருதேவதை இவர்களை ஒப்பாவார்கள். மாதா பிதாக்கள் இவன் விஷயமாக மிக்க கஷ்டப்பட்டவர்கள். வித்தையைக் கொடுப்பவன் மறு ஜனனத்தை உண்டாக்குகிறான். ஆதலால் இவர்களுக்கு வந்தனை வழிபாடு கள் செய்து உபசரிக்கவேண்டும். இவர்கள் மகிழ்ந்தால் அவனுக்குச் சித்தியாத தொன்றுமில்லை. இந்த வழிபாடு, தவங்கள் எல்லாவற்றிலும் சிறந்த தவமாம் என்று நூல்கள் எல்லாம் கூறுகின்றன.

(தொடரும்) சிவானந்த சாகர யோகீஸ்வரர்.

---

**சந்தாதாரர்களுக்கு.**—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் சந்தா நம் பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

## அக்ஷய வருஷப் பிறப்பு.

அனாதிகாலந்தொட்டே ஆழி சூழ்ந்த இவ்வுலகமானது, காரண காரிய வயப்பட்டு முக்குணவயத்தான், ப்ரம்மஸ்வய ரூபமாய் விளங்குகின்றதென்பது யாவரும் அறிந்ததே. நிற்க,

சிருஷ்டிகர்த்தாவாய் விளங்கும் ப்ரம்மதேவனின் சிருஷ்டிகளில், மற்றெல்லாப் பிராணிகளிலும், "மானிட ஜன்மமே" சிறந்த ஜன்மம். மனுஷனுக்கு யானை, காண்டாமிருகம் முதலான மிருகங்களுக்குண்டான பலம் இல்லையாயினும், அப்பேர்ப்பட்ட மிருகங்கள் தன்காலடியில் வந்து நின்று தானிடும் கட்டளையைத் தலைகுனிந்து செய்யும்படிபுரியும் சக்தி இருக்கிறது. மனுஷனுக்கு பக்ஷிஜாதிகளைப்போலப் பறக்கும்படியான இறகுகளில்லை. ஆயினும். ஆகாயத்தில் பறக்கும்படியான பக்ஷிகள் தன் பாதத்துக் கடியில்வந்து பணிவிடை செய்யுமாறுபுரிய அவனுக்குப் புத்தியிருக்கிறது. மனுஷனுக்கு புலி, சிம்மம், பாம்பு முதலிய ஜந்துக்களுக்குள்ள நகம், பற்கள், கொடிய விஷம் முதலியவைகளில்லாவிட்டாலும், அப்பிராணிகள் தன்னிடம் வந்து தன்னிஷ்டப்படி அடங்கி நடக்கச் செய்யும் சக்தி யிருக்கிறது.

மேலும், மனிதர், ஒரே பிந்துஜலத்தில் அனந்தங்கோடி பிராணிகளைப் பார்க்கக்கூடிய "சூக்ஷ்ம வீக்ஷணி"க் கருவியையும், அநேக யோசனைமைல் தூரத்துக்கப்பாலிருக்கும் அண்டகோளாதி தூமகேதுக்களையும், ஆயிரம் வருடங்களுக்கப்பால் நடக்கும் கிரஹணங்களையும் கண்டுபிடிக்கக்கூடிய "தூரவீக்ஷணி" என்னும் கருவியையும், அற்பகாலத்தில் வெகு தூரம் போகக்கூடிய புகைவண்டி, எலக்டிரிக்வண்டி, புகைக் கப்பல்களையும், ஆகாயக்கப்பல் புகைக்கூண்டுகளையும், பல்லாயிரம் மைல்தூரத்துக் கப்பாலுள்ள விஷயத்தைப் பத்துநிமிஷத்தில் வெளிப்படுத்த தந்தித்தபாலையும், அபாரஜலப்ரவாகத்தைக் கடக்க வாராவதிகளையும், துப்பாக்கி, பிஸ்டல் முதலிய விசித்திரக்கருவிகளையும், பத்திரிகைகளையும், கிரந்தங்களையும், க்ஷணத்தில் பதிப்பிக்கத்தகுந்த அச்சுயந்திரங்களையும், காலவித்தியாசமறிய அனிலோர்ப் பனித ரச சுர குழாய்களையும், இன்னுமனேக அற்புத விசித்திரக் கருவிகளையும், அமைக்கும்படியான அறிவைப் பெற்றிருப்பதால் மனித ஜென்மமே சாலச் சிறப்புடையதாகும். அந்த மனித ஜன்மமான நாம் நவக்கிரகங்களினால் ஆட்டுவிக்கப்படுகிறோம்.

இத்தகைய நாம் அந்தக் கிரக நிலைகளைப்பற்றி வருடந்தோறும் ஆராய்ந்தறிந்துகொள்ளுதல் அவசியமாகும். ஆதலின் இந்த அக்ஷய வருஷத்தின் கிரகநிலைகளையும் பலன்களையும் ஆராய்ந்து விளக்குவாம்.

இந்த அக்ஷய வருடமானது, சூரியனை—இரஸாதிபதியாகவும்; சந்திரனை—சேனாதிபதி, அர்க்காதிபதி, மேகாதிபதியாகவும்; செவ்வாயை—இராஜாவாகவும், மந்திரியாகவும்; புதனை—தான்யாதிபதியாகவும்; வியாழனை—நிரஸாதிபதியாகவும்; சுக்கிரனை—சஸ்யாதிபதியாகவும் நேமகம்

செய்துகொண்டு, சனிக்கு ஒரு ஸ்தானத்தையும் கொடாமல், ஆனிமீ 25வ வெள்ளிக்கிழமை இராத்திரியிலும், மார்கழிமீ 19வ இராத்திரியிலும்—நம் தேசத்தில் தோன்றாது, ஸிட்னி—மேல்போர்ன்—ஆக்லண்ட்-ஹோபார்ட் — வெல்லிங்டன் — வால்ப்ரெய்ஸோ — வான்கூவா—ப்ரான்ஸிஸ்கோ — யோகஹாமா—ஹானலூலூ—சுமித்திரா—ஜாவா—ஸிலிபீஸ் தீவு—பீஜிதீவுகள்—பிலிப்பைன் தீவுகள்—ஆஸ்ட்ரேலியா—ஜப்பான் முதலிய இடங்களில் சிலபாகங்களிற் றோன்றும்படிக்கு இரண்டு கங்கண சூரிய கிரகணங்களைக்கொண்டும், சந்திரனுக்கும், செவ்வாய்க்கும் இராஜஸ்தானத்தைப்பற்றியும், சுக்கிரனுக்கும், வியாழனுக்கும் திரஸாதிபதி ஸ்தானத்தைப்பற்றியும் விவாதமுண்டாக வோட்டுக்களால் செவ்வாயை—இராஜாவாகவும்; வியாழனை—திரஸாதிபதியாகவும் தீர்மானிக்கும்படி திட்டம் செய்துகொண்டும் வெகு உல்லாசமாய்ப் பாடாவரி நட்சத்திரத்தில் ஜனனமாயிற்று.

சகோதர சகோதரிகளே! "விளையும் பயிர் முளையிற்றெரியும்" என்பதுபோல ஆரம்பத்திலேயே இராஜாபட்டத்துக்கு சந்திரனும், செவ்வாயும் தம்மில் விவாதம் செய்துகொண்டு எலக்ஷனின்பேரில், செவ்வாய் இராஜாவாகும்படியான நூதன விசேஷத்தன்மையுடன் பிறந்திருக்கிற இவ்வருடப் பலனைக் கவனிப்பாம்:—

இவ்வருஷம் மஹாமேருபர்வதத்திற்கு வடமேற்குத்திக்கில் நீலமேகம் உற்பத்தியாகப் போகிறது. இருண்டமேகத்துடனும், மின்னலுடனும், அதிகர்ச்சனையுடனும், காற்றோடுங்கூடிய சுழிமழை 16படி; இதில் சமுத்திரத்தில் பாதியும், மற்றப்பாதியில் 3 பாகம் மலை வனாந்தரங்களிலும், 2-பாகம் நாடு நகரங்களிலும் வருஷிக்கும். பொதுவாக மழையினால் சில இடங்களில் பல கெடுதல்களுண்டாகும். பிந்திய வேளாண்மை சிறக்கும்; கோடைமழை சுழிக்கும்; மாரிமழை மிகுதி; பயிர்கள் மத்திமபலிதம்; சில பிரதேசங்களில் வெள்ளம், புயல், பூகம்பம் முதலியவைகளாலும், வியாதி, அக்னி, விஷம், திருட்டு முதலிய காரணங்களாலும் ஜனங்களுக்கு கஷ்டமும், சமயக்கலகங்களும், மதத்துவேஷங்களும் அதிகரிக்கும். சிலவிடங்களில் நல்ல மழையும், விளைவும், நீதிக்குறைவும், யுத்தபயமும், இராஜகலகமும் உண்டாம்—இந்து, மகதம், மிதிலை, சவ்வீரம், சீனம், பாஞ்சாலம், மிலேச்சம், மத்தியதேசம் முதலிய தேசங்களின் சில பாகங்களில் பஞ்சம், மழைக்குறைவு, வாந்தி, பேதி, வைசூரி, முதலியவைகளுண்டாம்.

ஐப்பசிமீ 24வ முதல் வருஷாந்தம்வரை காஸ்மீரம், கொங்கணம் முதலிய தேசங்களில் கலகமும், துண்டி, யவனம், சீனம், சிங்களம் முதலிய தேசங்களில் விசேஷமாய் பஞ்சமும், மழைக்குறைவும், கஷ்டமும், கலகமும் உண்டாம்.

இந்த அட்சய வருடமானது (13-4-26) மங்களவாரம், பூர்வபட்சம், சூன்யதிதி, அசுபதி, (பாடாவரி) நக்ஷத்திரத்தில் பகல் 11—44 மணிக்கு

மிதுன லக்னம் அந்தியத்தில்; மகோதரி என்னும் நாமம் பெற்று வில்வஜல ஸ்நானம் செய்து, வெள்ளைவஸ்திரம் தரித்து, மாணிக்காபரணமும்—கஸ்தூரி கதம்பமுமணிந்து, பொற்பாத்திரத்தில் சுத்தான்னம் புசித்து, புன்னைமலர்சூடி, முகண்டி ஆயுதம் தரித்து, சிம்ஹவாகனத்திலேறிக்கொண்டு, வெள்ளைக்குடைகவிய, அதிற்றூபங்கமழ, டமருக வாத்திய மியம்ப, புன்சிரிப்புடன், பூமி சுக்கிரன் யோகினிக் கெதிராகக் கிழ்த்திசையை நோக்கி ஜன்மிக்கிறது. ஆதலின், ஈயம், பித்தளை, நீலம், கஸ்தூரி, சந்தனம், கர்ப்பூரம், குங்குமம், கருப்புக்கட்டி, பருத்தி, பட்டு, நூல், புடவை, பொன், செம்பு, சாமை, கடலை, தினை, கோமேதகம், மாணிக்கம், புஷ்பராகம், மீன், கோதுமை, எள்ளு இவைகள் விலை குறையும்; நெல், வரகு, உளுந்து, முத்து, பவளம், இரத்தினம், வெங்கலம், இரும்பு, பயறு, புகையிலை, வெற்றிலை முதலியவை விலை ஏறும்; நெய், எண்ணெய், தேன், வெல்லம், இரஸம் முதலியவைகள் குறையும். அரசரால் வரி ஏற்றம் ஏற்படும். ஆசியாகண்டத்திலுள்ள "ஹிமய மலையில்" (30000) முப்பதினாயிரம் அடி உயரமுள்ள கௌரீசங்கரர் (எவரெஸ்ட்) என்னும் சிகரத்திற்கூட மனுஷசஞ்சாரம் ஏற்படும். பிராமணர்களுக்கும், அரசர்களுக்கும் பீடையும் சஞ்சலமும்; வைசியர், சூத்திரர்களுக்குச் சுகமும், வியாபார பலிதமும்; சோரர், தூர்த்தர், துஷ்டர், பரத்தையர்கள் இவர்களால் சர்ச்சனர்களுக்கு அதிககேடும், தேசபாஷைக்கு மதிப்பும், சிசு மரணமும் சில உண்டாகும்.

சித்திரை, வைகாசி மாதங்களில் விவாகாதி மங்கள கருமங்களும், தான தருமங்களும் சிறந்துவிளங்கும்; மத்திப விசேஷ மழையும், அகவிலை மலிவு முண்டாம். ஆனி, ஆடி மாதங்களில் காற்றும், சுழிமழையும், காவேரி முதலிய நதிகளில் வெள்ளப் பெருக்கமும்; ஆவணி, புரட்டாசிகளில், மழைக்குறைவும், பயிர்வாட்டமும், நவீன ரோகமும்; ஐப்பசி, கார்த்திகை மாதங்களில், காற்றினுல் சேதமும், நல்லமழையும், பயிர்ச்செழிப்பும், நாலுகால் ஜீவன்களுக்கு விசேடபீடையும், அகவிலை மலிவும், உலகத்துக்குச் சில நலிவும்; மார்கழி, தை, மாசி மாதங்களில், குளிர், காற்று, மழையும், வாந்திபேதி, சுரமும், அகவிலை மலிவும்; பங்குனி மாதத்தில், சுழிமழையும், காற்றினுல் பீடிப்பும், உஷ்ணரோகமும், அகவிலை சமனும் உண்டாம்.

உலகத்தில் உத்தேசம் ஆயிரம்கோடி மனிதர்களிருக்கிறார்கள். வருஷத்தில் 333 கோடி மனிதர்கள் மரணமடைவதாக கணக்கிடப்பட்டிருக்கிறார்கள். ஆனால் இவ்வருஷம் சகல ஜீவராசிகளிலும் 7-ல் 3 பங்கு அழிந்துபோம்.

இவ்வருடத்தில், அசுபதி, கார்த்திகை, மிருகசீரிடம், புனர்பூசம், ஆயில்யம், பூரம், அஸ்தம், சுவாதி, அனுஷம், மூலம், உத்திராடம், அவிட்டம், பூரட்டாதி, ரேவதி ஆகிய 14 நக்ஷத்திரங்களில் ஜனித்தவர்களுக்கு

வரவும், செலவும் சமபாகமாகவும்; ரோகணி, பூசம், உத்திரம், விசாகம், பூராடம், சதயம் இவ்வாறு நக்ஷத்திரங்களில் ஜனித்தவர்களுக்கு 3 பாகம் வரவும் 1-பாகம் செலவும், (சதயத்தில் ஜனித்தவர்க்கு ஸ்பெஷலாக திரவியலாபமும்), பரணி, மகம், கேட்டை, உத்திரட்டாதி இந்நான்கு நக்ஷத்திரங்களில் ஜனித்தவர்களுக்கு இருபாகம் வரவும் ஒருபாகம் செலவும், திருவாதிரை, சித்திரை, திருவோணம் இம்மூன்று நக்ஷத்திரங்களில் ஜனித்தவர்களுக்கு ஒருபாகம் வரவும் 3 பாகம் செலவுமாக இருக்கும். உத்திராடம், திருவோணம், அவிட்டம் இவற்றில் ஜனித்தவர்களுக்கு இராஜகோப மேற்படும். சித்திரை, கார்த்திகை மாதங்களில் சிவப்புநிற வஸ்துக்களும், ஆனி மாதத்தில் வெள்ளை தவிர மற்றநிறமுள்ள வஸ்துக்களும், ஆவணி மாதத்தில் வெள்ளைநிறப் பொருள்களும், புரட்டாசி, தை மாதங்களில் மஞ்சள்நிறப் பொருள்களும், ஐப்பசியில் ரோசுநிறப் பொருள்களும், வைகாசியில் சகலநிறமுள்ள வஸ்துக்களும் விலை ஏறும். மாசியில் கருப்பு வஸ்துக்களும், மார்கழியில் பச்சைநிற வஸ்துக்களும், பங்குனியில் வெள்ளைநிறப் பொருள்களும், ஆடியில் சகலநிற வஸ்துக்களும் விலை குறையும்.

இவ்வருடமானது வருஷ வட்டத்தி னிறுதியிலுள்ளதால் விவாகமுதலிய சில சுபகருமங்கள் சாஸ்திரங்களில் விலக்கப்பட்டிருக்கின்றன. எனினும், விந்தியகிரிக்குத் தெற்கேயுள்ளவர்கள் இவ்வருடத்தின்பின் 6 மாதங்களிலும் சுபகருமங்களை விலக்கி மற்ற மாதங்களில் செய்து கொள்ளலாம். தேவப்பிரதிஷ்டைசெய்யநேரிடின் சித்திரைமீ 10உ 16உ களில் சிம்ம லக்னத்திலும், ஆனிமீ 23உ மிதுனலக்னத்திலும் வைத்துக் கொள்ளலாம்.

ஆவணிமாதத்தில் இந்த அக்ஷய வருடத்திய ஞாபகசின்னமாக ஓர் துர்ப்பிக்ஷ முண்டாகக்கூடும்.

இவ்வருடம் யாதொரு விக்னமன்னியில் க்ஷேமமுண்டாக யாவரும் கடவுளைப் பிரார்த்திப்போமாக. சுபமஸ்து.

கே. எஸ். முத்துக்கிருஷ்ண ரெட்டியார், பாலஜோதிடம்;
மூலக்கரைப்பட்டி, (திருநெல்வேலி.)

---

## அக்ஷயவருஷ கலியாண சந்தேக நிவிர்த்தி.

இவ்வருஷம் கடைசி வருஷமானதால், இதில் விவாகாதி சுபமுகூர்த்தங்கள் செய்யலாமா செய்யக்கூடாதா என்று கடிதமெழுதிச் சிலர் நம்மைக் கேட்கின்றனர். இதற்குமுன் பிரசுரிக்கப்பட்டிருக்கும் "அக்ஷய வருஷப் பிறப்பு" என்ற வியாசத்தினிறுதியில், கே. எஸ். முத்துக்கிருஷ்ண ரெட்டியாரென்பவர், பின் ஆறுமாதங்களைத் தள்ளி மற்றமாதங்களில் முகூர்த்தத்திற்குப் பொருந்தியவற்றில் கலியாணம் முதலிய சுபகாரியங்கள் நடத்

தலாமென்று கூறுகின்றார். வேறு சில சோஸியர்களும் இவ்வாறு கூறுகின்றார்கள்.

அக்ஷய வருஷத்தில், "அங்க, வங்க, கலிங்க தேசங்களில் 6 மாதங்களும், வட இந்தியாவின் இதரதேசங்களில் வருஷமுழுவதும், விந்திய மலைக்குத் தெற்கேயுள்ள (தென்னிந்தியா) தேசங்களில் கடைசி மூன்று மாதங்களும் சுபமுகூர்த்தங்களுக்கு விலக்கத்தக்கன என்பது சிலர் அபிப்பிராயம்" என்று காலாமிர்த வியாக்கியானம் கூறுகின்றது. இவ்விவரம் நம் ஆனந்தபோதினிப்பஞ்சாங்கம் 8-ம் பக்கத்தில் 'அக்ஷயளூ விவாக சுப முகூர்த்தங்க' ளுக்குப்பின் விளக்கப்பட்டிருக்கிறது. இதன்படி தென்னிந்தியாவிலுள்ளவர்கள் கடைசி மூன்றுமாதங்களைத்தள்ளி மற்ற மாதங்களில் சுப முகூர்த்தத்திற் குரியவற்றில் விவாகாதி சுபமுகூர்த்தங்கள் செய்துகொள்ளலாமென்பது ஏற்படுகின்றது. ஆதலின் இவற்றுள் உசிதமானவற்றில் செய்துகொள்க. ப ஸ்ரீ.

---

## ஆத்திசூடி உதாரணக் கதைகள்.

(362-ம் பக்கத்தொடர்ச்சி)

"மன்றுபறித் துண்ணேல்"

"மன்று — தருமசபையிலே (நீ நியாயாதிபதியா யிருந்துகொண்டு வழக்குத் தீர்ப்புக்குவரும் மனிதரிற் பலரிடம் நடுவுநிலைமை தவறி ஒரு தலைச்சார்பா யிருக்கத்தொடங்கி), பறித்து—(அவர்களுடைய பொருளைக்) கவர்ந்து, உண்ணேல்—(அதன்மூலம்) உணவுண்டு சீவனம் பண்ணாதே" என்பது இதன்பொருள்.

நீதிமன்றங்களில் தலைவராய் அமர்வோர், மனிதர்களை அடக்கியாளும் அதிகாரத்தைப் பெற்றவர்களாதலின், அவர் செய்யும் நீதித் தீர்ப்பு நன்றாயினும் தீதாயினும் மனிதர், தடையின்றி அதை ஏற்றுக்கொள்ளக் கூடியவர்களா யிருக்கிறார்கள். ஆதலின் நியாயமான தீர்ப்பை யடைவோர் மனசம்மதத்துடன் அதனை யேற்றுக்கொள்வார்; நியாயவிரோதமான தீர்ப்பை அடைந்தவர் மனம் வெதும்பி 'திக்கற்றவர்க்குத் தெய்வமேதுணை' என்று நினைத்துத் தங்கள் குறையைத் தெய்வத்தினிடம் சொல்லி முறையிடுவார்கள். அதனால், அந்நடுநிலைமை தவறியவர்க்குத் தெய்வதண்டனை யுண்டாகும். முடிவில் அவர் கெட்டொழிவர். நியாயந் தவறாதவர்களோ இம்மை, மறுமை யென்னும் இரண்டிடங்களினும் மேன்மை யுறுவர். இங்ஙனம், நீதிவிரோதஞ் செய்பவர் கெடுவரென்பதும், நடுவுநிலைமை தவறாதவர் நன்மை யடைவரென்பதும்,

"கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்ச
நடுவொரீஇ யல்ல செயின்"

"வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே—மூதேவி
சென்றிருந்து வாழ்வாளே சேடன் குடிபுகுமே
மன்றோரஞ் சொன்னார் மனை."

"செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப் புடைத்து"

என்னும் செய்யுட்களால் இனிது விளங்கும்.

தருமந் தவறுவோர் கெடுவரென்பதை அடியில்வரும் சிறு கதை விளக்கும்:—

பண்டைக்காலத்தில் ஒரு நகரத்தில் ஒரு மனிதன் மற்றொருவனோடு விரோதங்கொண்டு எவ்வழியினாலாவது அவனை ஒழித்துவிடக் கருதியிருந்தான். அப்படியிருக்கும்போது ஒருநாளிரவில் அவனுடைய வேலைக்காரனொருவன், உயர்ந்த கட்டிடத்திலிருந்து கீழே தவறி வீழ்ந்து மண்டை உடைபட்டிறந்துவிட்டான். தன் விரோதியை ஒழிக்கக் கருதியிருந்த அம்மனிதன், 'அதற்கு இதுதான் தருணம்' என்று நினைத்து, இறந்துபோன மனிதனைத் தன்னுடைய விரோதியே கொலைசெய்துவிட்டானென்று அவ் ஊரெங்கும் தெரிவித்து, அப்போதிருந்த ஒருநீதித் தலைவரிடத்தில் அவன் மீது வழக்குத் தொடுத்தான். நீதிபதிபர் அவ்வழக்கினை விசாரித்ததில் அது கட்டுப்பாடானதென்று அவருக்குத் தெரிந்தது. அதனால் அவர் அவ்வழக்கைத் தள்ளிவிட உத்தேசித்திருந்தார். பொய்வழக்குக்காரன் அவருடைய எண்ணத்தை யுணர்ந்து ஒருநாள் இரவில் இரகசியமாக ஒரு பெரிய பை நிறைந்த பணத்தை யெடுத்துக்கொண்டுபோய் அவரிடம் கொடுத்து, "என்னுடைய விரோதிக்கு மரணதண்டனை விதித்து அவனை ஒழித்துவிட வேண்டும்" என்று சொன்னான். பணத்தைக் கண்டதும் அவர் அந்த அநியாயத்திற் கிணங்கிவிட்டார். மறுநாளே அந்தக் குற்றவாளியின்மீது கட்டுப்பாடான குற்றத்தைப் பொருத்தத்தோடு ஸ்தாபித்து அவனுக்கு மரண தண்டனை விதித்துவிட்டார். அந்த நிரபராதி என்னசெய்வான் பாவம்! தன்னைக் காப்பாற்றிக்கொள்ள வேறுவழி யுணராமல் நெஞ்சங்கலங்கி, ஏழைக்கிரங்கும் தெய்வத்தினிடத்தில், "கடவுளே! நீதான் என்னைக் காப்பாற்றவேண்டும்" என்று பிரார்த்தனை செய்தான். அவனுடைய மரணதண்டனை அதிகாரியால் நிறைவேற்றப்படும் நாளன்று சேவகர்கள் அவனைக் கொண்டுபோய்த் தூக்குமரத்தின் மேடையிலேற்றினார்கள். அவனுக்கு மரணத் தீர்ப்பளித்த அதிகாரியும், அவன்மீது பொய்க்குற்றஞ் சாட்டிய பாதகனும், மற்றையரும் அங்கேவந்து கூடி நின்றார்கள். அப்போது தூக்கு மேடையிலேற்றப்பட்டிருந்த நிரபராதி கடவுளை நோக்கி, எல்லோருக்கும் கேட்கும்படி, "எங்கும் நீதிசெலுத்தும் இறைவனே! நான் உண்மையில் கொலைக்குற்றம் செய்தவனாயிருந்தால் நீ என்னைக் கொன்றுவிடு; நான் நிரபராதியாயிருந்தால் அநியாயமாக என் தலைமீது குற்றத்தைச் சுமத்தியவர்களை நீ தண்டிப்பாயாக" என்று ஆகாயத்தைப் பார்த்துக் கூவினான். உடனே தெய்வச் செயலால், அநியாயத் தீர்ப்புச்செய்த தலைவர் தலையிலும், பொய்வழக்குத்தொடுத்த அப்புல்லன் தலையிலும் ஆகாயத்திலிருந்து ஓர் இடி அதிர்ந்து வீழ்ந்தது. அவ்விருவரும் அப்பொழுதே மாண்டொழிந்தார்கள்.

இவ்வதிசயத்தைப் பார்த்து அங்குக் கூடிநின்ற எல்லோரும் பிரமித்துவிட்டார்கள். அதன்மேல், மேல் அதிகாரிகள் அந்த வழக்கை மீண்டும்

விசாரித்து உண்மைதெரிந்து அந்த நிரபராதியை விடுதலை செய்தார்கள். அந்நகரத்திலுள்ளவர்களெல்லோரும் அந்த நிரபராதியைப் புகழ்ந்து, நீதி தவறியிறந்த அவ்விருவரையும் இகழ்ந்து, கடவுளின் அருட்டிறத்தை வியந்து கொண்டாடினார்கள்.

(தொடரும்) செம்பூர். வீ. ஆறுமுகஞ் சேர்வை.

---

## நாலடியார் வசனம்.

### (350-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 35-ம் அதிகாரம்—கீழ்மை (கீழோரது தன்மை.)

(உணவு வேண்டிய) காலத்தில் போதுமான அளவினதாகத் தானியத்தைத் தனது வாயில்போட்டு ஊட்டினாலும் குப்பைகிளறுந் தொழிலை விடாத கோழியைப்போல, மிக்க மேன்மைபொருந்திய தருமசாஸ்திரங்களை விரிவாக எடுத்துக் கூறினாலும் கீழ்மகன் தன்மனம் விரும்பியவிதமே போவான். (1)

'உறுதியான நூற்பொருள்களைக் கற்றுக்கொண்டு குற்றமில்லாதிருப்பவர்களாகிய பெரியோர்கள் பக்கத்தில்போய்ச் சேரலாம்வா' என்று (ஒருவன்) சொன்னால், கீழ்மகன் (அதற்குச் சம்மதியாமல்) தூங்கப் போகலாம் என்று எழுந்து போவான்; அப்படிக்கில்லாவிட்டால் வேறொன்றைச் சொல்லித் தடுப்பான். (2)

விளங்குகின்ற அருவிபொருந்திய நல்ல நாட்டையுடைய அரசனே! பெரியோர்கள், தாங்கள் மிக்க செல்வத்தைப் பெற்றாலும் (முன்னே கொண்டிருந்த) பெருமைக்குணம் மாறாமல் ஒரேதன்மை யுடையவராவர். கீழ்மகனோ மிக்க செல்வத்தை யடைந்தகாலத்திலும் (முந்திய நடைக்கு மாறான) ஒரு நடை நடக்க வல்லவனாவான். (3)

விளங்குகின்ற ஆற்றையும் நல்ல நாட்டையுமுடைய பாண்டியனே! மேலோர் தினையளவு சிறிதாயினும் பிறர்செய்த உபகாரத்தை (த்தாங்கள்) அநுபவித்தால் (அதை) பனையளவு பெரிதாகக் கருதுவார்கள். செய்ந்நன்றி யறியாதவர்களிடத்தில் பனையளவு நன்றியை எக்காலத்தும் செய்தாலும் (அந்நன்றிகள்) சிறப்பில்லாதவைகளாம். (4)

பொன்பாத்திரத்தில் (உணவைவைத்து) ஊட்டிக் காப்பாற்றினாலும் நாயானது பிறருடைய எச்சில் சோற்றிற்குக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கும். அதுபோல (கீழ்மக்களைப் பிறர்) சிறப்புள்ளவராக ஏற்றுக்கொண்டாலும் கீழ்மக்கள் செயயும் செய்கைகள் (பெருமைக்கு) வேறுபட்டிருக்கும். (5)

பூமண்டலம் முழுவதையும் அரசாளுவதாகிய பெருஞ் சிறப்பைப் பெற்றாலும் மேலோர் எக்காலத்தும் வரம்புகடந்த வார்த்தையைச் சொல்லமாட்டார்கள். (ஆனால்) கீழ்மகனானவன் முந்திரிக்குமேல் காணி அதிகமானால் எந்நாளும் தன்னை இந்திரனாக மதித்துவிடுவான். (6)

குற்றமற்ற பசுமையாகிய பொன்னின்மேல் மாட்சிமைப்பட்ட இரத்தினங்களைப் பதித்து செய்யப்பட்டதானாலும் செருப்பானது தன்னுடைய காலுக்கேயாகும். (அதுபோல) பொருந்திய செல்வமுடையவரானாலும் கீழ்மக்களை அவர்கள் செய்யுந்தொழிலால் அறியக்கூடும். (7)

பலம்பொருந்திய மலைகளையுடைய பாண்டியநாட்டரசனே! கீழ்மகனவன் கடுமையாகப் பேச வல்லவனுவான்; தாக்ஷிண்ய மில்லாதவனுவான்; அன்னியருக்குண்டாகும் துன்பத்திற்காகச் சந்தோஷப்படுவான்; அடிக்கடி கோபாவேசங்கொள்வான்; கண்டவிடத்தும் செல்வான்; பிறரைத் தூஷிப்பான். (8)

தேனைச்சொரியும் நெய்தற் பூக்களையுடையதாய் சப்திக்கும் குளிர்ந்த கடற்கரையையுடைய பாண்டியனே! பெரியோர் தங்களிடத்தில் பல நாளும் ஒருவன் பின்னே நின்றால் 'இவர் பழமையானவ' ரென்று நினைத்து அவர்களிடத்தில் இன்பமுள்ள சிநேகராவர். கீழானவர் விரும்பாமல் இகழ்வார்கள். (9)

பாண்டியனே! கேட்பாயாக. அறுக்கும்படியான புல்லை அறுத்து எப்பொழுதும் வாயில் கொடுத்து உண்பித்தாலும் சிறிய எருதுகள் (பெரிய) இரதத்தைத்தாங்கி இழுக்கமாட்டா. (அதுபோல) பொருந்திய செல்வமுடையவராஞலும் கீழோரை அவர்கள் செய்யுந் தொழிலால் அறியக் கூடும். (10)

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## அனுபவமே உண்மை.

அனுபவமாவது, ஒரு விஷயத்தைக்குறித்து ஒருவன் சுயமே அறிந்து கொள்ளும் ஞானமாகும். அதுவே உண்மை அறிவாகும். புத்தகங்களைப் படிப்பதன்மூலம் விஷயங்களைத் தெரிந்துகொள்ளுவதோடுமட்டும் நில்லாமல் நாமே நேரில் அவற்றை அனுபவித்து அறிந்துகொள்ளுவது பன்மடங்கு சிறந்தது என்பதை எவரும் மறுத்தல் முடியாது. அனுபவஞானமின்றி ஏட்டு ஞானம் மட்டுமே புள்ளவன் அரைப்படிப்பு உள்ளவனே. அனுபவம் விலைமதிக்கவொண்ணுததொன்று. ஆயிரக்கணக்கான தவறுதல்களும் துன்பங்களும் ஏற்பட்டபின்னே ஒரு முழு அனுபவம் ஒருவனுக்குக் கிட்டலாகும். இத்தகைய அனுபவஞானமே சிரேஷ்டமானது. அதுவே உண்மையாவதும். புத்தகங்களைப் படிப்பதன்பயனுய் அறியநேரிடும் விஷயங்களைத் தனது அனுபவ ஞானத்திற்குத் துணைக்கருவியாக மதிப்பவனே பூரணமான கல்வி யறிவு உடையவனுகக் கருதப்படுவான். "பள்ளிக் கணக்கு புள்ளிக்கு உதவாது", "ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவுமா?" மூவிரு அறிவுபடைத்த மாந்தர்கட்கு இருவகைப்பட்ட பசி—அதாவது, வயிற்றுப்பசி, அறிவுப்பசி—இருப்பது எவருக்கும் தெரிந்ததே. ஒரு விஷயத்தைப்பற்றிய உண்மையான அறிவு அனுபவமூலமே உண்டாவது. அன்னியரது அபிப்பிராயங்களைக் கற்றுத் தெரிந்துகொள்வதோடு நிற்காமல், நாமும் அவற்றைச் சுயமாய் அனுபவித்துத் தெரிந்துகொண்டு பின்பு இரண்டையும் ஒப்பிட்டுப்பார்த்துக் கடைசியாய் ஒரு முடிவான தீர்மானத்துக்கு வருவதே உசிதம். பிறரது அபிப்பிராயங்கள் எல்லாவற்றையும் அப்படியே வேதவாக்காக (உண்மையாக)க் கொள்ளுவதைக்காட்டிலும், நாமும் அவைகளைக் குறித்த உண்மைகளை ஆராய்ந்து அறிந்துகொள்ள முயலுவதே விரும்பத்தக்கதாகும். ஒருவேளை அவர்களது அபிப்பிராயங்களில் ஒரு சில தவறுதல்கள் இருந்தாலும் இருக்கலாகும். அதுபோலவே நாமும் தவறு இழைக்க நேரிடலாகும். இத்தகைய குற்றங்கள் ஒப்பிட்டுப் பார்க்கையில் நிவர்த்தியாய்விடும். அபிப்பிராயபேதம் உலகம் உள்ளவரை இருந்துகொண்டுதான் இருக்கும். ஒவ்வொரு விஷயத்தைக் குறித்தும்

ஒவ்வொருவரும் தாமே அனுபவமாய் அறிந்து தீர்மானமான முடிவுக்கு வரப் பழகவேண்டும். அப்பொழுதுதான் கல்வி கற்பதன் நோக்கம் பூர்த்திபெறும். எனவே, அனுபவ ஞானத்திற்குத் துணைக்கருவியாகவே புத்தகஞானம் இருக்கவேண்டுமென்று தெளிவாய் ஏற்படுகிறதல்லவா?

இனி, அனுபவஞானத்திற்கும், புத்தகஞானமட்டுக்கும் உள்ள பெரும் பேதத்தைச் சில உதாரணங்களின் உதவியால் விளக்குவோம்: முதலாவதாக, நதியைப்பற்றி ஆராய்வோம்: நமது குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடத்தில் ஆரம்பகாலங்களில் தேசபடங்களின் உதவிகொண்டு பூகோள சாஸ்திரம் போதிக்கப்படுகையில் உலகத்திலுள்ள பல முக்கியமான நதிகளின் பெயரும், இருப்பிடமும் கற்பிக்கப்படுகின்றனவன்றோ? அவற்றால் அந்நதிகளின் பெயர்களைமட்டும் அவர்கள் தெரிந்துகொள்ளக் கூடுமேயொழிய அவற்றின் உண்மையான தோற்றத்தை எங்ஙனம் தெரிந்துகொள்ள இயலும்? உலகிலுள்ள எல்லாவிதமான நதிகளும் ஒரே தோற்றமுடையனவா? இல்லை. இது அனுபவசாலிகளுக்கல்லவோ தெரியும். இவ்விஷயம் இளம்பிராயமுள்ள குழந்தைகளுக்கு எங்ஙனம் தெரியவரும்? தங்கள் இருப்பிடங்களுக்கு அருகிலுள்ள ஒரு நதியைப்போலவேதான் அவை யாவும் இருக்கலாகும் என்ற எண்ணமல்லவோ அவர்கள் மனதில் வேரூன்றுகின்றது. இத்தகைய தப்பிதத்தைப் பிற்காலம் அவர்கள் உலகம் பூராவும் சுற்றிப்பார்க்க நேரிடும்போது (நேரிட்டால்) தானே அறிந்துகொள்ள வியலும்.

நிற்க, நாம் ஒரு பூகோளபடத்தைப் பார்ப்போமானால் ஒவ்வொரு அரசாங்கத்திற்கும் சொந்தமான (நிலப்பரப்புக்கள்) தேசங்கள் தனிப்பட்ட வர்ணங்கள் தீட்டப்பெற்றிருப்பதால் தெரியவரும். இதனின்றும், அத்தேசங்களின் அரசியல் முறைகளைமட்டும் மேலாகத் தெரிந்துகொள்ளக் கூடுமேயல்லாமல் அத்தேச ஜனங்களின் நாகரிக நடையுடைபாவனை, சமூக வாழ்க்கையின் இயல்பு, அங்குள்ள பல இயற்கை விநோதங்கள் (சீதோஷ்ணம், மலைகள், காடுகள் முதலியன), அழகுபொருந்திய பிரம்மாண்டமான கட்டிடங்கள், அரண்கள், ஆலயங்கள், ரஸ்தாக்கள் இவைகளைப்பற்றி (அனுபவ பூர்வமாய் அறிந்துகொள்ளலாகும் விதம்) அறிய முடியுமா?

மற்றும், உலகத்தின் பல பாகங்களிலும் பல சமையங்களில் நடந்தேறிய யுத்தங்களைப்பற்றிய விவரங்களைப் புத்தகங்களின்மூலம் தெரிந்துகொண்டுவிடுவதால் மட்டும் ஒருவன் உண்மையில் யுத்தகளத்தில் போர்முனையில் நின்று எதிரியுடன் சண்டையிட்ட வீரனது அனுபவங்களைப்பெற்றவனாய் விடுவானோ? இதுபோலவே, இயற்கையின் அற்புதமான கடலைப் பார்த்தே யறியாத ஒருவன் எவ்விதம் அதன் ரமணீயமான தோற்றத்தையும், சூறாவளிக்காலத்து அதன் அல்லோலகல்லோலமான பயங்கரநிலையையும் தெரிந்துகொள்ள முடியும்? தெய்வீகமான ஆணைக்குக் கட்டுப்பட்ட பஞ்சபூதங்களில் ஒன்றன்சார்பான கடல்மீது செல்லும் கப்பல்களின் போக்கு வரவு விஷயங்களைக் குறித்தும், லாப நஷ்டங்களைப்பற்றியும் முன்னதாகவே தீர்மானித்து முடிவுகட்டிவிடும் தீர்க்கதரிசிகளின் மதிதான் என்னே! ஏனோ இவர்கள் எதிலும் கட்டுப்படாது நிற்கும் தெய்வ ஆணையைப்பற்றிச் சிந்திப்பதில்லை. "நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கும்" என்னும் வாக்குப் பொய்க்குமோ? எப்பொழுதும் நாம் கோரும்—கருதும் விதமே எல்லாக்காரியங்களும் நடைபெறுமென்பது யாது நிச்சயம். இன்னும், இயற்கை யணியாய் விளங்கலாகும் பர்வதங்

களின் உண்மையான விஷயங்களை நாம் எவ்விதம் புத்தகங்களினின்று மட்டுமே தெரிந்து தெளிதல் கூடும். நேரில் சென்று பார்த்தால் மட்டுமே அவற்றின் அருமை பெருமை தெரியவருமேயன்றி இவ்வாறு அறிந்து கொள்ளுவது என்பது வேடிக்கையான விஷயமே. இமயமலையின் உன்னத சிகரமான எவரஸ்ட் சற்றேறக்குறைய 6-மைல் உயரமானது என நாம் புத்தகங்களில் படிக்கிறோம். ஆனால், நாமே மலையடிவாரம் சேர்ந்து, வானத்தை யளாவிக் கண்ணுக்கெட்டாதவாறு வெகுதூரம் உயர்ந்து தோன்றும் அக்காட்சியைப் பார்ப்போமேயானால் அதன் உயரம் அவசியம் பதின்மடங்காகவே இருக்கவேண்டுமென்ற தீர்மானத்துக்கு எளிதில் வருவோம் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. அன்றியும் கட்டுக்கடங்காததும், ஆச்சரியம், திகில், பக்தி இத்தகைய உணர்ச்சிகளை ஒருங்கே எழுப்ப வல்லதாய்த் தானே தனக்கு நிகராய் விளங்குவதுமான அப்படைப்பின் கோலத்தைக்கண்டு மெய்ம்மறந்து போகாதவர் எவரேனும் உளரோ?

மேலும், அநுபவபூர்வமாய்த் தங்களது தேசங்களின்கண் ணுள்ள நலங்களையும், தீமையையும் பாரபட்சமின்றி அறிந்து தம் நாட்டிலுள்ள தீமைகளை ஒழிக்கவேண்டுமென்ற எண்ணமுடைய உண்மைத் தேசாபிமானிகளை, தங்கள் தங்கள் நாட்டின் நலங்களையேகாட்டித் தீமைகளை மறைக்கும் புத்தக அறிவில்மட்டுமே தேர்ந்தவர்களிடை எதிர்பார்க்க முடியாது. இதுகாரணமாகவே உண்மைத் தியாகிகளைக்காணுவது ஒவ்வொரு நாட்டிலும் அத்தி பூப்பதுபோ லிருக்கிறது.

இறுதியாக, கால அளவும், தூர அளவும் புத்தகங்கள் மூலம் தெரிந்து கொள்ளக்கூடியனவல்ல. ஆயிரக்கணக்கான வருட காலங்களில் முன் நடந்தேறிய வரலாறுகளைச் சரித்திரவாயிலாக அறிந்துகொள்ள முயலும்போது அவை எவ்வளவு மனித ஆயுட்காலத்தில்—நூற்றுக்கணக்கான வருடங்களில் நிகழ்ந்துள்ளன என்று கணக்கிட்டுப் படிக்க முற்படுவது நன்மையானது. அப்பொழுதுதான் உண்மையும் செவ்வனே விளங்கும். விஷயங்களும் செவ்வனே மனதில் பதியும். இதுபோலவே, தூர அளவும் நேரில் அநுபவித்து அறிந்துகொள்ளுவதன்மூலமே கிரகிக்க வல்லது. பம்பாய் துறைமுகத்தினின்றும் புறப்படும் கப்பல் சுமார் 17-நாட்களில் டோவர் (Dover) துறைமுகம் போய்ச் சேருகிறது என்று தெரிந்துகொண்டதால் மட்டுமே உண்மையாக இங்கிலாந்துக்குச் செல்லும் பிரயாணியின் அபரிமிதமான அநுபவங்கள் கிட்டிவிடுவதாகாது.

ஆகவே, நம்மிடை அநுபவஞானம் ஏற்படுவதற்கு நாம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விஷயத்தையும் சுயமே அறிந்து உண்மையான தீர்மானத்திற்கு வர முயலவேண்டும். உண்மையை எடுத்துக்காட்டும் வகையில் நமக்கு இரு சாதனங்கள் துணை புரிகின்றன. முதலாவதாக, விஷயங்களின் உண்மையை, காலத்தின் போக்கு செவ்வனே உணர்த்தவல்லது. காலஞ்செல்லச் செல்ல உண்மையான விஷயங்களே எஞ்சி நிலைத்து நின்று பிரகாசிக்கும். பொய்த்தோற்றங்களெல்லாம் மறைந்துவிடும். இது உலக இயல்பு—பிரபஞ்ச நியதி. இரண்டாவதாக, கவிகள் தங்களது தெய்வீகமானதொரு சக்தி காரணமாய் உலகத்தில் காணப்படும் பாமரர்களுக்குத் தெரியாது இலைமறை காய்போல் தோன்றும் உண்மை விஷயங்களை எவரும் மறுக்கவொண்ணுவிதமாகவும், வியந்து போற்றுமாறும் வெளிப்படுத்துகிறார்கள். தாங்கள் எவ்வாறு இவ்விஷயங்களை வெளியிட்டார்களென்பது அவர்களே யறிந்துகொள்ள முடியாத ஒரு பெரும் மர்மம். இவ்

வழியே நாம் அடையலாகும் அறிவு உண்மை (அனுபவ) ஞானமாயிருக்கும் என்று நிச்சயமாய் நம்பலாம். நாம் அனைவரும் அனுபவ அறிவு பெற்று வாழ்க்கைநலம் துய்க்குமாறு எல்லாம் வல்ல இறைவன் கருணை மழை பொழிவானாக! பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

T. R. ஸ்ரீநிவாசன், வடக்குசித்திரவீதி; ஸ்ரீரங்கம்.

---

## மரணத்திற்குப் பின் மனிதர் நிலை.

இஃதோ ரற்புதானுபவம். இதில் நம்பிக்கையுள்ள ஆங்கிலேயரும் இருக்கின்றனர். பிரசித்திபெற்ற ஸர் ஆர்தர் கானன் டாயில் (Sir Arthur Conan Doyle) என்பவர் 17—1—26-ல் வெளிவந்த ஆங்கில வாராந்தர இந்தியா டைம்ஸ் பத்திரிகையில் எழுதியவற்றின் சாராம்சம்:—

"மரணத்திற்குப்பின் மனிதர் மாயா ரூபமாகவந்து தங்கள் பிரியத்திற்குரியாருடன் பேசிப் போகின்றனர் என்னும் விஷயத்தில் சிலருக்கு நம்பகமும் சிலருக்கு நம்பகமின்மையும் இருந்து வருகின்றனவென்பதை நாம் அறிவோம். நான் அமெரிக்காவின் மேற்பாகத்தி லிருந்தபோது இங்கிலாந்தில் (லண்டனில்) இருந்த எனது தகப்பனார் மரணநிலையி லிருக்கிறாரென்றும், உடனே புறப்பட்டுவந்தால் அவரைப் பார்த்துப் பேசக்கூடும் என்றும் ஒரு தந்தி சமாசாரம் 1896ஞு மார்ச்சுமீ எனக்குக் கிடைத்தது. தந்தி கிடைத்த அந்த நிமிஷமே புகைரத மார்க்கமாக நான் அமெரிக்காவைவிட்டு நியூ யார்க் என்னும் இடத்திலிருந்து இங்கிலாந்திற்குப் போகும் கப்பலில் ஏறப் புறப்பட்டேன். நான் வெளிதேச யாத்திரையி லிருந்தபடியால் எனது தகப்பனாரைப்பார்த்துப் பதினைந்து வருஷங்களுக்கு மேலாகின்றது. இங்கிலாந்திற்குப் புறப்பட்ட நான் வழியில் கப்பல் தங்கிச்செல்லும் ஒவ்வொரு இடங்களிலிருந்தும் எனது வரவைப்பற்றி என் தந்தையாருக்குத் தந்தி கொடுத்துக்கொண்டு போனேன். நான் போகவேண்டியது நெடுந்தூரப் பயணமாயிருந்தது; 6,000 மைலுக் கதிகம். கடைசியாக நான் ஒருநாள் காலை இரண்டுமணிக்கு எனது தகப்பனாரிடம் போய்ச் சேர்ந்தேன். 'உமது வரவைப்பற்றிய தந்தியே உம்முடைய தகப்பனாரை இன்னும் உயிரோடிருக்க வைத்திருக்கிறது' என்று வயித்தியர்கள் என்னிடம் சொன்னார்கள்.

என் தகப்பனாரை மிக்க ஆவலுடன் நான் தழுவிக்கொண்டேன்: தகப்பனார் என்னைப் பார்த்து 'மைந்தா! அநேக வருஷங்களுக்கு முன்னரே குடும்ப சம்பந்தமான சில விஷயங்களை உனக்குத் தெரிவிக்க வேண்டுமென்றிருந்தேன். அது தவறிப்போயிற்று. அதை நான் இப்போது உன்னிடம் வெளியிட தெய்வானுக்கிரகத்தால் பிழைத்திருக்க நேர்ந்தது. நீ கவனிக்கத்தக்க சில பத்திரங்களுண்டு. அவை லண்டனிலுள்ள வக்கீல்களிட மிருக்கின்றன. அவற்றை நீ உடனே பெற்றுக்கொள்ளவேண்டும். அந்த வக்கீல்களின் பெயர் இப்போது என் ஞாபகத்தில் இல்லை. எனது சிரசைக் கொஞ்சம் உயரத்தூக்கு; ஜன்னல்களைத் திற; எனக்குக் காற்று வேண்டும்; ஒருவேளை அந்த ஞாபகம் எனக்குண்டாகும்; என் அன்புள்ள குமாரனே! என்னை நீ மன்னிக்கவேண்டும். அனேகரைப்போல நானும் உனக்குத் தெரிவிக்கவேண்டியவற்றைத் தெரிவியாமலே தாமதஞ் செய்துவிட்டேன். அந்த விஷயம் இப்போது என் ஞாபகத்திற்கு எட்டவேயில்லை.' என்றார்.

இப்படிச் சொல்லிக்கொண்டேயிருக்கும்போது அவருக்குப் பாரிச வாயுவுண்டாய் மேலே பேசவொட்டாமற் செய்துவிட்டது. நான்குமணி

நேரம் அவர் கண்களைத்திறந்து என்னைப் பார்த்தபடியே யிருந்து விடியற் காலைக்குள் காலமாய்விட்டார். பிறகு நான் அவரை அடக்கஞ் செய்து விட்டு அவர் சொன்ன பத்திரவிஷயத்தில் சிரத்தையற்றவனு யிருந்துவிட்டேன். எனக்கு எல்லாம் இயற்கையின்படி நடக்கும் என்கிற நம்பிக்கை யுண்டு. அதனுல் நான் அதை லட்சியஞ்செய்யாமல் அமெரிக்காவிற்கே திரும்பிவிட்டேன்.

இரண்டு வருஷம் பொறுத்து நான் மீண்டும் இங்கிலாந்திற்கு வந்தேன். ஒருநாள், ஞாயிற்றுக்கிழமை பிற்பகலில் ரயில்வே ஸ்டேஷனில் சில சிநேகிதர்களின் வரவை முன்னிட்டு நான் காத்துக்கொண்டிருக்க நேர்ந்தது. குறித்தநேரத்தில் ரயில் வரவில்லை. வழியில் தடை நேரிட்டபடியால் ரயில்வர இன்னும் மூன்றுமணிநேரம் செல்லுமென்று எனக்கு ரயில்வே அதிகாரிகள் தெரிவித்தார்கள். அந்த ஸ்டேஷன் நகரத்திற்கு அருகாண்மையிலிருந்தது. நான் சிலமணிநேரம் அந்த ஸ்டேஷனிலேயே காக்கவேண்டி யிருந்தபடியால், பொழுதுபோக்க ஏதாவது படிக்கலாமென்று பார்த்ததில் அந்த ஸ்டேஷனில் எனக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. ஆனுல் தரையில் துண்டுக் கடிதம் ஒன்று கிடந்தது. அதை எடுத்துப் பிரிக்கும்போது இந்தப் பயனற்ற கடிதத்தையா நாம் படிப்பது என்று எனக்கே நகைப்புண்டாயிற்று. விதியின்றி யதை நான் படிக்கலானேன். அது இறந்தவர்கள் மாயாரூபமாக வருகின்றனர் என்னும் விஷயசம்பந்தமாக இங்கிலாந்தில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள சபையின் பிரசுரமாயிருந்தது. இந்தச் சபை ஸ்டேஷனுக்குச் சமீபத்திலேயே யிருந்தது. அந்த ஞாயிற்றுக்கிழமை பகல் 4-மணிக்கு ஷை சபையில் மாயாரூப விஷயமாக மிஸ்டர் ஸெஸில் ஹஸ்க் (Mr. Cecil Husk) என்பவரால் ஒருகாக்ஷி நடத்தப்படும் என்று மேற் சொன்ன துண்டுக் கடிதத்தில் கண்டிருந்தது.

ஒரு போலீஸ் சேவகன் மூலமாக ஷை சபையுள்ள இடத்தைக் கண்டுபிடித்து அங்கே நுழைந்தேன். வயோதிகமாது ஒருத்தி என்னை உள்ளே அழைத்துக்கொண்டுபோய் உட்காரவைத்தாள். அநேகர் அங்கு விஜயஞ் செய்திருந்தார்கள். தெய்வஸ்துதியுடன் காட்சி ஆரம்பிக்கப்பட்டது.

மிஸ்டர் ஹஸ்க் என்பவர் என் சமீபத்தில் எதிராக உட்கார்ந்தார். சபையின் அறையில் போதுமான வெளிச்சமிருந்தது. மிஸ்டர் ஹஸ்க் என்பவரின் முகம் எனக்கு நன்ருய்த் தெரிந்தது. அவர் வயோதிகராகவும் பலவீனராகவும் ஆனுல் அன்புடன் பேசுபவராகவும் காணப்பட்டார்.

உடனே என் கண்முன்பாக ஏதோ ஒன்று ஓருருவத்தை யெடுப்பதாக எனக்குத் தெரியவந்தது. முதலில் அது ஒரு மெல்லிய ஆடையால் தன்னை மறைத்துக்கொண்டு வருவதுபோற் றேன்றிற்று. ஆனுல் இதன் மூலமாக மிஸ்டர் ஹஸ்க் என்பவரின் உருவம் மறைவுபடாது காணப்பட்டது. பிறகு புதிதாய்த்தோன்றிய ரூபம் வரவரத் தெளிவாய்த் தோன்றி என்னருகே வந்தது. என்ன நடக்கிறதோ அதைப் பொறுமையோடிருந்து காணவேண்டுமென்கிற ஆசையால் நான் வாய்திறவாமலே யிருந்தேன். சிறிதுநேரத்தில் மெத்தென்றும் ஜில்லென்றுங் குளிர்ந்த கையொன்று என்கண்காண எனது தலைமேற்சென்று என் தலையை மெதுவாகத்தட்டியதாகப் பரிசித்தேன். இது எனக்கு ஆச்சரியத்தை யுண்டுபண்ணிற்று. அப்போது மிஸ்டர் ஹஸ்க் சபையைப்பார்த்து என்னைச் சுட்டிக்காட்டி, "இவரோடு மாயாரூபம் ஒன்று பிரத்தியக்ஷமாய்ப் பேசவிருப்பதாகத் தெரிகிறது. இவரை நாம் உற்சாகப்படுத்தவேண்டும்" என்று சொன்னர்.

இப்படி அவர் சொன்னதும் தெய்வத்துதி செய்யப்பட்டது. என் சமீபத்தில் திடீரென்று உற்பவித்த முகமொன்று காணப்பட்டது. மறுபடியும் தெய்வஸ்துதி செய்யப்பட்டது. புதிதாகக் காணப்பட்ட அந்த முகம் தெளிவாய்த் தோன்றியது. அடுத்த நிமிஷம் அந்த முகம் காலஞ்சென்ற எனது தந்தையின் உருவமாக விளங்கியது.

நானோ நாஸ்திகன். நான் அந்த உருவத்திற்கு யாதொரு மரியாதையுஞ் செய்யவில்லை. என் தகப்பனாரைப்போ லிவ்வுருவத்தை இச்சபையார் எப்படி யுண்டுபண்ணினர் என்பதை நினைக்க நினைக்க எனக்கே வியப்பாயிருந்தது. ஆகிலும் அதைப்பற்றி நான் ஒரு சிரத்தையும் எடுத்துக்கொள்ளவில்லை. இவ்வுருவம் வேறெவரையோ கருதி வந்திருக்கும் என்று நினைத்தேன். இப்படி நான் நினைத்ததும் அந்த உருவம் மறைந்துவிட்டது. நான் 'நல்லதாயிற்று' என்று உட்கார்ந்திருந்த நாற்காலிமீதே சாய்ந்துகொண்டிருந்தேன். அப்போது என் காதினிடத்தில் 'குழந்தாய்! உன் பொருட்டாகவே நான் வந்திருக்கிறேன்' என்று ரகசியமாகப் பேசிய தொனி விழுந்தது. என்பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர் (ஸர் வில்லியம் வாவஸ்ஸூர் என்று பிறகு தெரிந்துகொண்டேன்) என்னைப்பார்த்து 'ஐயா! உம்முடன் யாரோ ஒருவர் பேசினாரே. அப்பேச்சை நீர் கேட்டீரோ?' என்றார். நான் "இல்லை. அப்பேச்சு எனக்குக் கேட்கவில்லை" என்றேன். இப்படி நான் பொய் பேசினது என் மனசாட்சியை வருத்திக்கொண்டிருந்தது. பின்பு அவ்வறையைவிட்டு வெளியேபோக எண்ணங்கொண்டேன். உடனே என் தகப்பனார் உருவம் மீண்டுந் தோன்றிற்று. இப்போது இந்த வுருவத்தின் அங்க அடையாளம் முதலியயாவும் வெகு நன்றாய்த் தெரிந்தன." (தொடரும்.)

ம. இராஜகோபாலபிள்ளை, சோமளேசுவரன்பேட்டை.

---

## தமிழின் முற்கால தற்கால நிலைமைகள்.

ஒரு தேசத்து மனிதரின் அறிவொழுக்கங்களின் நிலைமையும், செல்வநிலைமையும் அந்நாட்டுச் சரித்திர நூற்களான் விளங்குவனவாம். அந்நிலைமைகளைப்பற்றிய சரித்திர நூற்கள் இந்தியாவில் பண்டைக்காலந்தொட்டு எழுதப்படவில்லை. ஆதலின், இந்தியரின் சிறப்பியல்புகளைத் தெரிவிக்கக்கூடிய சரித்திரநூற்கள் போதுமான வரையில் கிடைத்தில. சில நூற்றாண்டுகட்கு முன்னர் மேனாட்டார், சகல வளங்களானு முயர்ந்த இந்தியாவோடு வியாபாரஞ் செய்யத் தொடங்கிப் பின் பெயர்தலின்றித் தங்கிய பிறகே அவர்களால் எழுதப்பட்டுள்ள சில சரித்திரங்கள் வெளிவந்துலவுகின்றன. எனினும், அவை பெரிதும் மேனாட்டாரின் பெருமையினையும், அவர்கள் இந்தியாவின் பொருட்டுச் செய்த வீரச் செயல்களையும், இந்தியாவுக்கு அவர்களால் ஏற்பட்ட நன்மையினையும் சிறப்பித்துப் பேசுவனவாய் நாடெங்கும் பரவி ஆங்கிலத் தேர்ச்சியுள்ள இந்தியர்களால் மட்டும் பெரிதும் புகழப்பெற்றுத் திகழ்கின்றனவேயன்றி நம் முன்னோர்களின் உண்மைப் பெருமையினை நன்கு தெரிவிப்பனவாக நம் ஆன்றோர் கருதுந் தன்மையினை யுடையனவல்ல. ஆயின் நம் நாட்டில் உயர்ந்தாரின் இயற்கையினை விளக்குவனவாய்த் தோன்றிய நூற்கள் இல்லையோவெனின், உண்டு. அவை, தற்காலம் சிற்சிலர் இங்குமங்குமாகத் 'தமிழ்' 'தமிழ்' எனும் அளவிலேனும் ஆரவார ஒலியினை யெழுப்பி யிருத்தற்கு

அறிவுமிக்க சான்றோரா லியற்றப்பட்டு நல்வினைபெற்று நிலவுகின்றன வாகிய இலக்கிய இலக்கணங்களும், இங்குமங்குமாகக்கண்டு எடுக்கப்பட்டு வரும் கல்வெட்டுக்களுமாம்.

இச்சில கருவிகளைக்கொண்டே சிலர் சில்லாண்டுகளாக ஆராய்ச்சி வாயிலாக முன்னோர்தம் பெருமையினைப் பல்லோரும் அறியச் சிற்சில நூற்களையும், குறிப்புக்களையும் வெளியிட்டு வருகின்றனர். இத்துறையிற் சிற்சிலர் முயற்சியுடையராய்ச் சில வெளியீடுகளை வெளியிடுதல் அம் முயற்சியில்லார்க்கு அத னுயர்வினை விளக்கும் ஒரு தூண்டுகோலாகும். அத்தூண்டுகோல்,

"..................................தம்மினும்
கற்றோரை நோக்கிக் கருத்தழிக கற்றவெல்லாம்
எற்றே யிவர்க்குநா மென்று"

(நீதி-நெ-வி.) என்றதுகொண்டு மொழியினைக் கற்பார்க்குப் பெரும்பயன் செய்வதாகும். எனினும் பெரும்பாலார் அதனை மதியாதவராயும், அத் துறையி லிறங்காதாராயும், அதற்கு மாறான வழிச்சென்று தம் நிலைமை யறியாதாராய் அச்சிலரே போன்று தாமும் பலவாய பயனற்ற வெளியீடு களை விரைவில் வெளிப்படுத்தியவராய்ப் பிறரைத் தாக்குதலையே மேற் கொள்வாராகின்றனர். அத்தகையினர், தம்மைத்தாமே மதிக்கும் மதிப் பைப் பிறர் அறிய முயல்பவ ராகுவரேயன்றித் தம்மறிவு பெருகற்குரிய தைச் செய்தவராவரோ? இனி நம் முன்னவர் பெருமையினைச் சிறிது ஆராய்வாம்.

முன்னவர் கல்வி கேள்விகளால் மேம்பாடுற்றிருந்தனரென்பது அவர் இயற்றிய நூற்களானே தெளிவாம். முன்னவர் பலரானும் எழுதப் பட்ட பாடல்கள் பலவற்றையும் உட்கொண்ட புறநானூறு, குறுந்தொகை போன்ற சில தொகை நூல்களின் நடையினையும் சொற்பொருள்களின் போக்கினையும் ஆராய்வார்க்கு அவ்வப்பாடல்களின் தலைப்பில் அவ்வப் பாடல்களை யியற்றினாரது பெயரினைக் காணாவிடத்து எல்லாச் செய்யுட் களும் ஒருவர்தம் வாக்கே என்னுந் துணிவே பிறக்கும். இத்துணிபு ஏற்படு வதனாலேயே, அக்காலத்தான்றோர் பலருடைய அறிவும் ஏறக்குறைய ஒரு நிலையில் இருந்தமை புலப்படும். அவர் அனைவரும் இத்தகைய புலமை யுடையராய் வாழ்ந்தமைக்குக் காரணம் அன்னார் காலத்துப் புரவலரும், அவரைப் புரந்தமையோடு, அவரும், கல்வியின்பால் மிக்க பற்று வைத்தது மாகும். அக்காரணத்தால் புலவருட் பலரும் புரப்பார் உண்டு எனும் துணிபுடையராய்ப் பொருளீட்டுந் துறைகளிற் புகாது, தம் வாழ்க்கைக்கு இன்றியமையாப் பொருளை வேண்டுங்காலத்துப் பெருநில மன்னரிடத் தும் குறுநிலத்தவர்பாலும் அடுத்து அவர்தம் அறிவு, ஆற்றல், அன்பு, இசை முதலியவற்றை யெடுத்துப் பேசித் தம்நிலைமை தெளிவித்து, எல்லையில் பொன்னும் பூமியும் பிறவும் நல்ல பரிசிலாகப்பெற்று வாழ்வாராயினர்.

பொருளீட்டுந் தொழிலில் நின்றாரும் எத்துணைப் பெயரோ நுண்ணறி வுடையராய்த் திகழ்ந்தனர். மற்றும் புலவருள்ளும் புரவலருள்ளும் ஒரு வரோடொருவர் நட்புப்பூண்டு, 'நாம், அவர்' என்னும் வேற்றுமையின்றி எத்துணைப்பெயரோ வாழ்ந்தனர். ஒருவர், தம்மை ஆதரித்தவரே யெனி னும், அவர் தம்மைக் கடிந்தவிடத்துப் பொறுது தம் கல்விப்பெருமிதத் தால் அவரைப் பொருட்படுத்தாது, தம் அறிவின் சிறப்பினை நிறுத்திச் சென்றவர் பலர். இன்னும் புலவர் பலர், தம்மால் பாடப்பட்டோர் தமக்கு

அரசினையும் மகிழ்ந்து உதவ அவர்க்கே அவ்வரசினைத் திரும்பக்கொடுத்து அமைச்சத்தொழில் பூண்டிருந்தனர். இனி நாம் இவர் இவ்வாறு வாழ்ந்தமைக்கு இரண்டோருதாரணம் காட்டி மேற் சொல்லுவாம்.

பாண்டியன் ஆரியப்படை தந்த நெடுஞ்செழியன்,

" உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே
பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளுஞ்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியும்
ஒரு குடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே "

(புறம்-183) எனக் கூறியிருத்தலான் அவன் கல்வியினை எவ்வளவு சிறந்ததாக மதித்திருந்தானென்பது புலப்படும். இங்ஙனம், அவன் சிறந்ததாகத் தன்னால் மதிக்கப்பட்ட கல்வியினையுடையாரை எத்தகைய அன்புடன் ஆதரித்திருக்கக்கூடும்? புலவர் அரசர்பால் அடுத்தடுத்துச் செல்லினும், அன்னார், அவர் விரும்புவன முனிவின்றி அவர்க்கு மிகைபடக் கொடுத்து அவரை ஆதரிப்பர். இங்ஙனம் புரவலர் புலவர்க்குதவுவர் என்பது,

" ஒருநாட் செல்லல மிருநாட் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ
அணிபூண் அணிந்த யானை யியறே
ரதியமான் பரிசில் பெறூஉங் காலம்
நீட்டினும் நீட்டா தாயினும் யானைதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுவது பொய்யா காதே
அருந்தே மாந்த நெஞ்சம்
வருந்த வேண்டா வாழ்கவன் றாளே "

(புறம்-101) என்னும் ஔவையார் கூற்றானே விளங்குவதாகும். இன்னும், பெருஞ்சித்திரனார் வெளிமானிடம் சென்று பொருள்வேண்ட, அதுகாலைத் துஞ்சுந்தறுவாயிலிருந்த அவன், அதுபொழுதும் தன் தம்பியைநோக்கி 'இவர்க்குப் பரிசில் கொடு' வென, அவன் அவர்க்குச் சிறிது பொருள் கொடுப்ப அவர் அதனைக் கொள்ளாதுபோய்க் குமணனைப் பாடிக் குமணன் பகடு கொடுக்க அதனைக் கொணர்ந்து வெளிமானூர்ப்புறத்து மரத்தில் கட்டித் தனக்கு முன் சிறிது பொருள் கொடுத்தானை நோக்கி,

" இரவலர் புரவலை நீயு மல்லை
புரவலர் இரவலர்க் கில்லையு மல்லர்
இரவலர் உண்மையுங் காணினி நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானையெம் பரிசில்
கடுமான் தோன்றல் செல்வல் யானே "

(புறம்-162) எனப் பாடியதனானும் புலவர் பெருமிதமுடையரா யிருந்தனர்

என்பது தோன்றுவதன்றோ? சுருங்கச் சொல்லின் முற்காலத்திய புலவர்களுள்ளும் புரவலர்களுள்ளும் பெரும்பாலார்,

"கல்வி தறுகண் ணிசைமை கொடையெனச்
சொல்லப் பட்ட பெருமித நான்கே"

(தொல். பொரு. மெய். 7) எனும் இச் சூத்திரத்திற் கிலக்குடையராக வாழ்ந்துவந்தனரென்பது பெறப்படுவதாகும். இனித் தற்காலம் தமிழிருக்கும் நிலையினை ஒரு சிறிதுகூறி இவ்வியாசத்தை முடிப்பாம்.

ஒரு நாடு செழித்தல் கல்வியால் ஆகுவதாம். கல்வியுடையாரே தம் நாட்டு நூற்களை யறிந்து உண்மை பலவற்றையும், தம் முன்னோருடைய வீரம் கொடை முதலியவற்றையும் உணர்ந்து தம் தாய் நாட்டில் பற்றுடையவராய் நாடு செழித்தற் கேற்றன செய்வார். ஆதலின் தாய் நாட்டிடத்துப் பற்றுத் தோன்றத் தாய்மொழியால் ஆக்கப்பட்ட நூற்களைப் படித்தல் வேண்டுவதாம். தற்காலம் மாணவர் பலரும் விரும்பிக் கற்கும் நிலைமையி லிருப்பதோ ஆங்கிலமாம். ஆங்கிலம் கற்குமவர், ஆங்கிலப்புலவர் பலரால் எழுதப்பட்ட பல காவியங்களைப் பேரவாவுடன் கற்று அப் புலவர் பெருமக்களின் பெருமையினை யெடுத்துப் பேசுவர். கல்வி பயில் பவருள், அவர்தம்மைப் புகழ்தல் போன்று நம் நாட்டுமக்களைப் புகழுமவர் எத்தனை பெயர் இருத்தல் கூடும். மிகச் சிலரே யாவர் எனச் சொல்லுதலும் வேண்டுமோ? பலரும் நம் நூல்களைப் பாராத்தன்மையானும், கல்வி பயிலும் மாணவரைப் பார்க்கும் வழியிற் செலுத்தாமையானுமன்றோ இங்ஙனம் 'நம் நாட்டினரைப் புகழ்வோர் சிலரேயாவர்' என்னும் பேச்சு நிகழ்வதாகின்றது.

இன்னும், 'தமிழைப் பயின்றாலும் அதனால் வருவதொரு பயன் இன்று' எனவே மாணவர் பலரும் எண்ணிவிடும் நிலைமையில் தற்காலம் தமிழிருந்து வருகிறது. இதனால் அவர், தமிழையே புறக்கணிப்பாராகின்றனர். ஒரு தொழிலைச் செய்பவர்க்கு அத்தொழிலால் பயன் உண்டாகும் எனும் உறுதி உண்டாகாவிடத்து அவர் அத்தொழிலைச் செய்தலை மேற்கொள்வரோ? ஒருபோதும் கொள்ளார். ஆதலின் இந்நிலை நீங்கவும், கற்பாரும் கற்பிப்பாரும் தமிழ்மொழி வளர்த்தற்காவனவற்றிற் செல்லவும், இடம் ஏற்படுதற்கே தமிழர் ஒவ்வொருவரும் இனி முயலுதல் வேண்டும். ஆங்கிலம் தற்காலம் நாடெங்கும் பரவியிருத்தற்குச் சர்வகலாசாலைகளும், பலகலாசாலைகளும் ஏற்பட்டிருத்தல் போன்று தமிழ்ப் பாஷையும் எங்கும் பரவுவதாக அதற்கும் அதற்கெனத் தனியாகச் சர்வகலாசாலைகளும், பலரும் முறைமையில் பயிலப் பல கலாசாலைகளும் ஏற்படுதல் வேண்டும். இவ்வேற்பாட்டிற்கே தமிழரும் பிறரும் முயல்வாராக.

N திருவேங்கடத்தையங்கார், தமிழ்ப்பண்டிதர்;
C. R. C. High School, Purasawalkam.

---

## பகவத்கீதை வசனம்.

(373-ம் பக்கத் தொடர்ச்சி.)

[பூர்வ சுலோகத்தில் ஞானுதி காணுதி இருமும்மையும் அருளப்பெற்றது. இப்போது அவற்றில் திரிகுணரூபத்தன்மை யவசியம் கூறத்தக்கதாமாதலின் ஸ்ரீபகவான் அவற்றைத் தொகுத்துக் கூறியருளி அவற்றில் திரிகுண ரூபத்தன்மையின் பகுஞ்லைஞலயச் செய்தருளுகின்றார்]

ஹே அர்ச்சுன! சாங்கியசாஸ்திரத்தின்கண் ஞானமும் கருமமும் கருத்தாவும் சத்துவாதி முக்குணபேதத்தானே மூவகையே யாகுமென்ப. அந்த ஞானாதிகளையும் அவற்றின் வேற்றுமைகளையும் நீ யுள்ளபடி கேட்பாயாக.

ஹே கௌந்தேய! பிரத்யக்ஷாதிப் பிரமாண ஜன்னியவஸ்துவின் பிரகாரூப அந்தக்கரண விருத்திரூப ஞானமே இங்கு ஞானசப்தத்தாற் கவரத்தக்கதாம். வஸ்துவில் ஞேயத்தன்மை உண்டாதல் ஞானரூப உபாதியாலாயதா ஞானமின்றி யாகாதாம். ஆதலின் மொழிந்த ஞேயத்திற்கும், ஞானத்தின்கண் ணடக்கமாம். கருமசப்தத்தானே யாகாதிரூபக் கிரியையைக் கவர்க. கருமம் கரணம் என்னும் இரண்டு காரகங்களும் கிரியையின்கண் உள்ளடக்கமாம்; ஏனெனின், வத்துவின்கண்ணே காரகத்தன்மை கிரியை வடிவ உபாதியாலாயதாம்; கிரியையின்றி யுண்டாகாதாமாதலின் கூறிய உள்ளடக்கம் பொருத்தமுடையதேயாம். முன்னர் அருளிய கிரியையை யுண்டாக்குவதாகிய கருத்தாவையே ஈண்டுக் கருத்தா சப்தத்தானே கவர்க. பரிஞாதாவை இக்கர்த்தாவின் கண்ணே யடக்கமெனவறிக. கரணம் கருமம் என்னும் இரண்டு காரகங்களைப்போலக் கர்த்தாவின் கண்ணும் கிரியை யுபாதிகத்தன்மை சமானமேயா மாதலின் அவ்விரண்டைப்போலக் கர்த்தாவையும் தனியே கூறுதல் கூடாதெனினும், கர்த்தாவின்கண்ணே தனியாகத் திரிகுணத்தன்மைரூபக் கூற்றுக்குத் தார்க்கிகர்கள் மயலாற் கற்பித்த ஆன்மத்தன்மையை நீக்கும் பொருட்டாம். அவரோ கர்த்தாவையே யான்மா வென்பர். ஞானாதி மூன்றும் குணசங்கியானத்தில் சத்துவாதி வேற்றுமையானே சாத்விகம் இராஜசம் தாமசம் என மூவகையாகக் கூறப்பெற்றுளது. சத்துவாதி முக்குணம் காரியவேற்றுமையானே எந்நூலின்கண்ணே பிரதிபாதிக்கப் பெற்றுளதோ அது குண சங்கியானமாம். அத்தகையது கபிலமுனிவர் கூறிய சாங்கியசாஸ்திரமாம். அதன்கண்ணிவை யறையப்பெற்றுள்ளனவாம். சாத்விகாதி முப்பேதங்களன்றி நான்காவதொன்றின்றாம். சாங்கியசாஸ்திரம் பரமார்த்தப் பிரஹ்மத்தின் ஒருமையின்கண்ணே பிரமாண மாகாதாம்; ஆங்குநானு ஆன்மாவே அங்கீகாரமாதலின்; என்றாலும் சாங்கியசாஸ்திரம் அபரமார்த்தரூப சத்துவாதிகுணங்களின் கௌணபேத நிரூபணத்தில் வியாவகாரிகப் பிரமாணபாவத்தை யடையும்; அதனானே இதனை ஸ்ரீ பகவான் சிலாகித்தருளினர்; அதாவது ஞானாதிகளின் மூவகைத்தகைமை கேவலம் இக்கீதாசாஸ்திரத்தின்மட்டும் பிரசித்தமல்லவாம்; மற்றோ, கபில முனிவர் கூறிய சாங்கிய சாஸ்திரத்தின்கண்ணும் பிரசித்தமாம். ஞானாதிகளையும், சத்துவாதிகுணங்களா லாக்கப்பெற்ற அவற்றின் வேற்றுமையையும் உள்ளபடியே கேட்பாயாக; அதாவது சாஸ்திரத்தில் அவற்றின் சொரூபங் கூறப்பட்டவாறே சிரவணிக்கும்பொருட்டு நீ சாவதானன் ஆதியென்பதாம். முன் 14-வது 17-வது அத்தியாயங்களில் ஸ்ரீபகவான் சத்துவாதிகளையும் அவற்றாலாய சாத்விகாதி பேதங்களையும் கூறியருளி மீண்டு மீண்டுங் கூறி யருளுவதானே கூறியது கூறலென்னுங் குற்றமாம் எனினும், இவ்வித விவத்தையானே அத்தோட மணுகாதாம். பூர்வம் 14 - வது அத்தியாயத்திலோ சத்துவாதிகுணங்களில் பந்தஹேதுத்தன்மையின் பிரகாரம் நிரூபித்தருளப்பட்டது, குணாதீதனுக்கு ஜீவன் முக்தத்தன்மையை நிரூபித்தருளும்பொருட்டாம் 17-வ தத்தியாயத்திலோ சத்துவாதிகுணங்கள்செய்த மூவகைச் சுபாவத்தை நிரூபித்தருளியதால் இப்பொருள் துணியப் பெறும் அதிகாரி அசுரரூப ராஜசதாமசசுபாவத்தைப் பரித்தியாகித்துச் சாத்விக ஆகாராதிகளைச் சேவித்துத் தேவரூப சாத்விக இயற்கையே

சம்பாதிக்கத்தக்கதென்பதாம். இப்பதினெட்டாவது அத்தியாயத்திலோ இயற்கையானே குணாதீத அசங்க ஆன்மாவிற்குக் கிரியை காரகம் பலம் என்னும் மூன்றோடும் சிறிது மாத்திரையும் சம்பந்தமின்றாம். இப்பொருளை புணர்த்தி யருளும்பொருட்டுக் கிரியாகாரகாதி யாவற்றிற்கும் திரிகுண ரூபத்தன்மையேயாம்; இதனினும் அயலாக எவ்வடிவமும் அவற்றிற்கில தாம்; இக்கிரியாகாரகாதிகட்கு ஆன்மாவின் சம்பந்தித்தன்மையாமாத லின்; என்னும் பொருள்கூறி யருளப்பெற்றதாம். இதுவே மூன்றத்தியாய வசனங்களில் விசேஷத்தன்மையாமாதலின் ஈண்டுக் கூறியது கூறல் என் னுங் குற்றமுண்டாகாதாம். (தொடரும்) சீடன்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(375-ம் பக்கத் தொடர்ச்சி.)

அம்மாது:—அப்போது என் முகத்தை யுமக்குக்காட்டிய மனிதன் எவ்வாறு நடந்துகொண்டான்?

ஆனந்தஸிங்:—தான் ஒரு பெரிய போக்கிரியும் மகா கள்ளப்பயலுமாகிய பரமதுஷ்டனென்றும், அவன் அனியாயமாய் அன்னியர்மேல் சுமத்தப்பார்த்த குற்றத்தைச் செய்தவன் தானேயென்றும் நான் கண்டறிந்துகொள்ளும்படி நடந்துகொண்டான்.

அம்:—அந்தோ! நான் உண்மையாகவே இறந்துபோயிருக்கலாகாதா!

ஆன:—அக்ரமஸ்தர் ஜெயமடையவேண்டுமென்று ஏன் கோருகிறாய்?

அம்பாலிகை யவனை யுற்றுநோக்கி "நீ களங்கமற்ற உள்ளமுடையவனாகவும், சத்தியவானாகவும் காணப்படுகிறாய்" என்றாள்.

ஆன:—நீ கூறுவது உண்மையே.

அம்:—நீ நல்ல அறிவாளியும், பெருந்தன்மை யுடையவனுமாய் இருக்கிறாய். எல்லாம் தெரிந்திருந்தும் இறந்துபோய்விட்டிருக்கலாகாதா வென்றதற்கு ஏன் வியப்படைகிறாய்?

ஆன:—நீ பிழைத்துக்கொண்டிருப்பதற்கும் உன் விரோதிகளின் சூழ்ச்சியைத் தோற்கடித்து, உனக்காக மிக்க விசனப்பட்டுக்கொண்டிருக்கும் அன்புடைய நண்பனின் துயரத்தை நீக்குவதற்கும் பிரியப்படாமல் இருப்பது மிக்க ஆச்சரியமா யிருக்கிறது.

அம்பா:—"இல்லை யில்லை. நான் ஒருபோதும் கறுப்பண்ணனை மணம்புரிய மாட்டேன். அவன் உண்மையும், சத்தியமும், கருணையுமுடைய தீரமான நண்பனாய் நடந்துகொண்டாலும் அவன் என் சினேகிதத்தோடு திருப்தியடைந்திருக்க வேண்டியதே. நான் இச்சென்மத்தில் முதல் காதலித்தவனைத்தவிர இன்னொருவனை யொருபோதும் காதலிக்கமாட்டேன். எங்கு காதலில்லையோ அங்கு ஒருபோதும் மணம் செய்துகொள்ள மாட்டேன்." என்றாள்.

---

## 14-வது அத்தியாயம்.

ஆனந்தஸிங் வியப்போடு அவள் முகத்தை யுற்றுநோக்கினான். மர்மம் இப்போதுதான் வெளிக்கு வருகிறதென்று தெரிந்துகொண்டான். அவன் மனதில் உண்மை யிப்போதுதான் உதிக்கத்தொடங்கியது. அவள் எவ்

வளவுதூரம் மோசம்போ யிருக்கிருளோ அவ்வளவும் வெளிவருமட்டும் நாம் வாய்திறக்கலாகாதென்று தீர்மானித்துக்கொண்டு,

"கறுப்பண்ணனை நீ மணம்புரிந்துகொள்ளவேண்டுமென்று நான் விரும்பவில்லை" யென்ருன்.

அம்பாலிகை யவன் சொற்களைக் கவனிக்காமலே,

"ஆ! நான் நேசிக்கப்பட்டதுபோல் நேசிக்கப்பட்டு, மிக்க அன்போடும் உறுதியோடும் நல்ல பெருந்தன்மையும் சத்தியமும் அன்புமுடைய மகா உத்தமனுல் நேசிக்கப்படுகிறேமென்று பூரணமாய் நம்பியிருந்து, கடைசியில் அவன் நமது சொத்துக்காகவே நம்மை நேசித்தானென்றும், நமது பணத்திற்காக நம்மைக் கொல்லத்துணிந்த அத்தகைய இரக்கமற்ற அயோக்கியனென்றும் தெரியவந்தால் எத்தகைய பிராணவஸ்தையாயிருக்கும்! இத்தகைய மோசமும், அநீதமும் நம்பிக்கைத் துரோகமும் நடக்கும் இவ்வுலகத்தில் வசிப்பதைவிட பிராணத் தியாகம் செய்து கொள்ளலாமென்று இப்போதும் என் மனம் நாடுகிறது." என்ருள்.

ஆனந்தவிங் ஒருவித நகைபுரிந்து "நீ எதையோ நடவாதவற்றையெல்லாம் சிந்திக்கிருய்" என்ருன்.

அம்பா:—"அந்தோ! அப்படியே யிருக்கலாகாதா! இன்னொரு சங்கதி—நான் உலகோரால் மடிந்துபோனவளாகக் கருதப்பட்டிருக்கிறேன் தெரியுமா?

ஆன:—அது தெரியும்.

அம்பா:—நான் உலகிற்குச் செத்தவளாகவே யிருப்பேன். என் சொத்துக்காக என்னைக்கொல்ல முயன்றவனே என் சொத்தை யனுபவித்துக் கொண்டு வாழட்டும்.

ஆன:—நீ பிறகு இதைப்பற்றி வேறுவிதமாய்ச் சிந்திப்பாய்.

அம்பா:—"நான் நாளைப் பொழுது விடியுமுன் என் ஆஸ்திமுழுதும் அவனுக்கு எழுதி வைத்துவிடப்போகிறேன்." என்ருள்.

ஆனந்தவிங் மிக்க வியப்போடு அவள் முகத்தை யுற்றுநோக்கி, "அப்படியாயின் இந்த இரவு நீ கறுப்பண்ணனை மணம்புரிந்துகொள்ளப்போகிருயோ?" என்ருன்.

அம்பா:—ஒருகாலும் நான் அவனை மணம்புரியமாட்டேன்.

ஆன:—மிக்க சந்தோஷம்.

அம்பா:—"ஏன் சந்தோஷம்?" என்று கேட்டாள்.

ஆன:—நான் மனம்விட்டுக் கூறட்டுமா?

அம்பா:—கூறு.

ஆன:—கறுப்பண்ணனைப்போன்ற பக்கா அக்ரமஸ்தனும் மோசக்காரக் கள்ளப்பயலும் வேறு அகப்படுவது கஷ்டம்.

இதைக்கேட்டதே, அவளுக்குண்டான ஆச்சரியம் கொஞ்ச நஞ்சமல்ல. சற்று நிதானித்து ஆனந்தவிங்கைச் சற்று வெறுப்போடு நோக்கி,

"ஆ! தெரிந்துவிட்டது. நீ என்னுடைய கொடிய விரோதியின் பட்சத்தில் பேசுகிருய்" என்ருள்.

ஆன:—நீ யாரை யுன்னுடைய கொடிய விரோதியாய்க் கருதியிருக்கிருய்?

அம்:—உன்னை யனுப்பிய ஆள்.

ஆன:—என்னை யனுப்பியவள்தான் பவானி யென்று முன்னமே கூறினேனே.

அம்:—என்ன செய்வதற்காக அனுப்பப்பட்டாய்?

ஆன:—உன்னைக் கண்டுபிடிக்க,

அம்:—கண்டுபிடித்து; சுயநலங்கருதாது என்னைக் காப்பாற்றிய தைரியமும் பெருந்தன்மையுமுடைய கறுப்பண்ணன் கெட்டவனென்று துர்ப்போதனை செய்யவா?

(தொடரும்) ஆரணி குப்புசாமி முதலியார்.

## முக்கிய அறிவிப்பு.

நமது ஆனந்தபோதினி பத்திரிகையின் விஷயமாக நாம் வெளிநாடுகளுக்கு அனுப்பியிருந்த ஏஜண்டு திரும்பி வந்துவிட்டார். இப்போது ஒருவருமில்லை. ஏஜண்டு அனுப்பப்படுவதாயிருந்தால் அவ்விஷயத்தைப்பற்றி நாம் உடனே நமது போதினியில் பிரசுரஞ் செய்வோம். இதனை நமது சந்தாநேயர்கள் கவனிப்பார்களாக.

பத்திராதிபர்.

தும்மல் மரம்:—இம்மரம் தென் ஆப்பிரிக்காவில் இருக்கின்றது. இதனை வெட்டினாலும் அறுத்தாலும் அவ்வாறு செய்யும் மனிதருக்குத் தும்மல் உண்டாகின்றது. எத்தகைய பூச்சியும் இதனிடம் அணுகுவதில்லை. இம்மரத்துண்டுகள் கெட்டியாயும் அழகாயும் வேலைக்கு உபயோகமானவையாயும் இருக்கின்றனவாம். இது மிகுதியும் கசப்பாம்.

* * * * * *

மாமிசாகாரத் தடை.—உணவின்பொருட்டு ஜீவஹிம்ஸை செய்து வரும் பழக்கத்தைத் தமது ஊரில் இனி கையாடக்கூடாதென்று இந்தூர் மகாராஜா தண்டோரா போடுவித்திருக்கிறாராம். கசாப்புக் கடைகள் மூடப்படும். முட்டை, மீன் முதலானவையும் விற்க அனுமதி கொடுக்கப்படமாட்டாதென்று தெரியவருகிறது.

* * * * * *

மகத்துவமுள்ள யோகி:—யோகி யொருவர் ஸ்ரீ வில்லிபுத்தூரில் நாற்பதுநாள் பூமிக்குள் இருந்து யோகஞ்செய்து வெளிவருவார் என்னும் விஷயம் நமது பத்திரிகையில் முன்னர் வெளியாயிருக்கிறது. இவர் மூன்று நாள் பூமிக்குள் இறங்கி நிஷ்டையி லிருந்தார். இச்சங்கதியை அறிந்த அதிகாரிகள் இதைத்தடுத்து இவரைச் சமாதியினின்றும் வெளியேறச் செய்துவிட்டனர். இவ்வாறு தடுக்காதிருந்தால் தாம் சொன்னபடி செய்து வெளிவரக்கூடும் என்று இவர் சொல்லுகிறாராம். மூன்றுநாளிருந்ததையே ஜனங்கள் புகழ்கின்றார்களாம்.

* * * * * *

ஒரு ஜோடி கெட்டி முத்து:—தூத்துக்குடியில் பத்துவயதுள்ள ஓர் ஏழைப்பெண்ணுக்கு ஒரு முத்துச்சிப்பி கிடைத்ததாம். அதை யப்பெண் அறுக்க அதில் ஒளிபொருந்தி[illegible] முத்திருக்கக் கண்டாள். அதன் விலை ஆயிரக்கணக்கிலிருந்து கடைசியாக ரூபா 150-க்கு மதிப்பிடப்பட்டதாம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

அக்ஷய௵ வைகாசி௴—கலியுகாதி 5028, சாலிவாகனம் 1849,
பசலி 1335—கொல்லமாண்டு 1101—ஹிஜரி 1344,
இங்கிலீஷ் 1926௵ மே௴—ஜூன்௴

| வைகாசி | மே | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வெ | திரி54-0 | மிரு53-30 | சித்60 | அக்ஷய திரிதியை, பலராம ஜயந்தி |
| 2 | 15 | சனி | சது55-45 | திரு57-25 | சித்60 | மாசசதுர்த்திவிரதம் [ண |
| 3 | 16 | ஞா | பஞ்59-40 | புன60 | சித்60 | வியாதியஸ்தர் மருந்துண் |
| 4 | 17 | திங் | சஷ்60 | புன2-50 | அ2-50சி | திருதினஸ்பிருக், சஷ்டி |
| 5 | 18 | செவ் | சஷ்4-0 | பூசம்9-40 | சித்60 | கங்கா சப்தமி |
| 6 | 19 | புத | சப்10-45 | ஆயி17-5 | சித்60 | நவக்கிரகசாந்திசெய்ய |
| 7 | 20 | வியா | அ16-55 | மக24-40 | அ24-40சி | யாத்திரைவிலக்க |
| 8 | 21 | வெ | நவ22-40 | பூரம்31-40 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 9 | 22 | சனி | தச27-28 | உத்37-45 | மர60 | மரணயோகம் |
| 10 | 23 | ஞா | ஏ30-50 | அஸ்42-28 | அ42-28சி | சர்வ மத்வ ஏகாதசி |
| 11 | 24 | திங் | து32-38 | சித்45-40 | பி45-40அ | சுபகாரியம் விலக்க |
| 12 | 25 | செவ் | திர32-53 | சுவா47-13 | சி47-13ம | பிரதோஷம் |
| 13 | 26 | புத | சது31-33 | விசா47-20 | சித்60 | நரசிம்மஜயந்தி |
| 14 | 27 | வியா | ○28-55 | அனு46-10 | சி46-10பி | பௌர்ணமி, சம்பத்கௌ |
| 15 | 28 | வெ | பிர25-8 | கேட்44 0 | ம44-0அ | கத்திரி முடிவு [ரிவிரதம் |
| 16 | 29 | சனி | து20-28 | மூலம்41-5 | சித்60 | |
| 17 | 30 | ஞா | திரி15-23 | பூரா37-40 | சி37-40அ | |
| 18 | 31 | திங் | சது9-45 | உத்34-0 | ம34-0அ | |
| 19 | 1 | செவ் | பஞ்4-0<br>சஷ்58-15 | திரு30-13 | சித்60 | |
| 20 | 2 | புத | சப்52-35 | அவி26-23 | பி26-43சி | |
| 21 | 3 | வியா | அ47-5 | சதை22-43 | ம22-43சி | |
| 22 | 4 | வெ | நவ41-50 | பூரட்19-23 | சித்60 | |
| 23 | 5 | சனி | தச37-3 | உத்16-20 | சி16-20ம | |
| 24 | 6 | ஞா | ஏ32-50 | ரேவ13-50 | அ13-50சி | |
| 25 | 7 | திங் | து29-18 | அஸ்11-58 | சித்60 | பிரதோஷம் |
| 26 | 8 | செ | திர26-35 | பர✕10-53 | சித்60 | கிருத்திகை விரதம் |
| 27 | 9 | புத | சது25-10 | கிரு10-53 | அ10-53சி | போதாயன அமாவாசை |
| 28 | 10 | வியா | ●24-43 | ரோ13-33 | அமி60 | அவமாகம், அமாவாசை |
| 29 | 11 | வெ | பிர25-43 | மிரு14-33 | சித்60 | சந்திரதெரிசனம் உற்றுப் [பார்க்கவும் |
| 30 | 12 | சனி | துதி28-8 | திரு18-15 | சித்60 | களஞ்சியம் வைக்க |
| 31 | 13 | ஞா | திரி31-53 | புன23-28 | சித்60 | சேக்கிழார் சுவாமிகள் திருநட்சத்திரம் |
| 32 | 14 | திங் | சது36-8 | பூச29-43 | சித்60 | மாசசதுர்த்திவிரதம் |

1926௵ ஜூன்

| சுக் | புத | சூரி | ரா |
|---|---|---|---|
| குரு<br>செ | 2உ துலா-ச<br>13,, ரிஷ புத<br>14,, மே-சுக்<br>22,, மீன-செ<br>26,, மிது-புத | | |
| கே | சனி | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE
"ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS,